# ஸ்ரீ ராமாநுஜன் 118

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 10 | 1958ஆ அக்டோபர்மீ விளம்பிஆ ஐப்பசிமீ | மலர் 10 |
| --- | --- | --- |


## திருவாய்மொழி நூற்றந்தாதி - 10

பொருமாழி சங்குடையோன் பூதலத்தே வந்து *
தருமாறோ ரேதுவறத் தன்னை *—திரமாகப்
பார்த்துரைசெய் மாறன் பதம்பணிக வென்சென்னி *
வாழ்த்திடுக வென்னுடைய வாய்.

பொரும் ஆழி சங்கு உடையோன் — (பகைவர்மீது போர்புரிகின்ற) திருவாழி திருச்சங்குகளை ஏந்தியிருப்பவனான எம்பெருமான்
பூதலத்தே வந்து —இந்நிலவுலகில் வந்து தோன்றி
ஓர் ஏது அற —நிர்ஹேதுகமாக
தன்னை தரும் ஆறு —அடியார்க்குத் தன்னை யநுபவிக்கத் தருகிறபடியை
திரம் ஆக பார்த்து உரை செய் — ஸ்திரமாக ஸாக்ஷாத்கரித்து அருளிச்செய்த
மாறன் —நம்மாழ்வாருடைய
பதம் —திருவடிகளை
என் சென்னி பணிக — எனது தலை வணங்குக;
என்னுடைய வாய் வாழ்த்திடுக — எனது வாக்கானது (அத்திருவடிகளுக்கே) மங்களாசாஸனம் செய்க.

எம்பெருமானுடைய அநுக்ரஹம் நிர்ஹேதுகமென்பது *பொருமாநீள்படைப்பதிகத்தில் அநுபவித்தருளிச்செய்யப்படுகிறது. கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் தம்மோடே அவயவங்கள்தோறுங் கலந்த கலவியை அருளிச்செய்த ஆழ்வார் அந்தக் கலவியால் தமக்குப் பிறந்த அளவிலாத ஆனந்தத்தை இத்திருவாய்மொழிமுகத்தால் வெளியிடுகிறார் என்று இங்ஙனே சில ஆசார்யர்கள் நிர்வஹிப்பதுண்டு. பட்டர் விசேஷித்து நிர்வஹிப்பராம்; எங்ஙனேயென்னில்; கீழ்த்திருவாய்மொழியில் "வந்து எனதுச்சியுளானே" என்றும் "உச்சியுள்ளேநிற்கும் தேவதேவர்க்கு" என்றும் தலைக்கொண்ட அநுபவம் தமக்குக் கிடைத்ததாக ஆழ்வாரருளிச்செய்தார். இனி அவ்வநுபவத்திற்காட்டிலும் எற்றமாகச் செய்துகொடுக்கக் கூடிய வேறு அநுபவம் என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை. அவ்வநுபவம் இடையறாது தொடர்ந்து செல்லுமாறு செய்து கொடுக்கவேண்டுமத்தனையே யுள்ளது. அது எம்பெருமான் திருவுள்ளத்தைப் பொறுத்தவிஷயம். அது நிற்க. ஆழ்வார் கீழ்த்திருவாய்மொழியில் தமக்குப்பிறந்த பேற்றை ஆராய்ந்துபார்த்து இப்போது நமக்குக் கிடைத்தபேறோ மிகவுங் கனத்திருக்கின்றது; இதிற்காட்டிலும் உத்தமமான பேறு வேறொன்றில்லை; இத்தகைய பேறு நமக்கு வந்த வழி என்ன? என்று விமர்சிக்கத் தொடங்கினார். இப்பேற்றிற்குத் தகுதி

யாயிருப்பதொரு நன்மை [அதாவது * இதற்குத்தக்க ஸாதநாநுஷ்டானம்] தம்மிடத்தில் ஒன்றுமில்லை என்பதைத் தெரிந்துகொண்டார்; தம் தலையில் ஏதேனுமிருந்தாலும், அத்வேஷமோ ஆபிமுக்யமோ இருக்குமேயன்றி வேறொன்றிருப்பதாகக் காணவிடமில்லை. அவை ஸாதனமாக நினைக்கவொண்ணாதவை; இத்தலையிலே பரமபக்தியளவும் பிறந்தாலும் நம்மிடத்திலே ஸாதனமாக மதிக்கலாவதொன்றில்லையே; ஒருவன் ஓர் எலுமிச்சம்பழத்தைக் கொடுத்து ராஜ்யத்தைப்பெற்றால் அதற்கு அது விலையாக நினைக்கலாகுமோ? எம்பெருமானடியாக நமக்குக் கிடைக்கும் பேற்றுக்கு இத்தலையில் ஒரு ஸாதனமும் நிரூபிக்கவொண்ணாதே; "வரவாறொன்றில்லையால் வாழ்வு இனிதால்" என்று ஆழ்வார்தாமே அருளிச் செய்யும்படியாயிற்றே. சேதநனை முதலிலே ஸ்ருஷ்டிக்கிறபோது 'இவன் தீயவழியைத் தப்பி நல்வழி போகவேணும்' என்று உபகரணங்களைக் கொடுத்துவிடுகையாலே சேதனன் தலையால் பிறந்த நன்மைக்கும் அவனேயன்றோ மூலகாரணமாயிருக்கத் தகுதியுடையான்; புத்தி முதலிய ஸகல பதார்த்தங்களுக்கும் நிர்வாஹகனும் அவனேயாகையாலே அத்வேஷம் முதலாகப் பரமபக்தியீறாக எல்லா நன்மைகளையும் தானே பிறப்பிப்பான்; ஆகவே இப்படி எம்பெருமான் நிர்ஹேதுகமாகப் பண்ணிக்கொடுத்த பரமோபகாரம் என்னே! என்று உருகி உள்குழைந்து அநுஸந்திப்பதென்று ஒன்றுண்டே; அதுதான் இப்பதிகத்திற்செல்லுகிறதென்று.

கீழ்த்திருவாய்மொழியில் உந்மஸ்தகமாகப் பிறந்த கலவியின்பத்தை நினைத்து உருகுகிறாரென்பது மற்ற ஆசாரியர்களின் நிர்வாஹத்திற்கும் பட்டர் நிர்வாஹத்துக்கும் ஒக்கும். நிர்ஹேதுகத்வாநுஸந்தானத்தையும் கூட்டி ரஸிப்பிக்கை பட்டர் நிர்வாஹத்திற்குத் தன்னேற்றம். இந்த நிர்வாஹத்தை ஸ்ரீமந் நிகமாந்தமஹாதேசிகனும் ஆதரித்தருளினரென்பது தாத்பர்யரத்நாவளியில் * ஆதாவித்தம் பரத்வாதித்யாதி ச்லோகத்தில் அவ்யாஜோதாரபாவாத்" என்றருளிச்செய்ததனால் ஸ்பஷ்டம். .... .... .... .... (*)

# மதிப்புரை.

## அபர்யாப்தாம்ருத மங்களாசாஸன ஸ்தோத்ரம்.

மிகவழகிய உரையுடன் கூடிய இப்புத்தகம் நாம் வரப்பெற்றுப் பல மாதங்களாயின. இதன் பெருமையைப்பற்றி நாம் முன்னமே வெளியிட்டிருக்க வேண்டியது ப்ராப்தம். ஆனால், இது நம்மிடம் வந்தவுடனே சில ஆப்தர்கள் இதனைப் பார்க்க வாங்கிக் கொண்டு போயிருந்தபடியாலும், நாமும் வடநாட்டுத் திருப்பதி யாத்திரையில் இருந்துவிட்டபடியாலும் இடையில் தைவிகமாகவே தாமதமேற்பட்டுவிட்டது.

நமது பரமாப்தர்களில் தலைவரும் பகவத்விஷய ரஸிகருமான ஸ்ரீமதுபயவே. வித்வான் இளையவில்லி. ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி திருக்குடந்தையில் வாழ்பவர் ஸ்ரீ வைஷ்ணவவுலகில் ஸுப்ரஸித்தர். இந்த ஸ்வாமி உபந்யஸிப்பதிற் போலவே உரைகள் இயற்றுவதிலும் நல்விரகர் என்பதை இன்று நாம் புதிதாகத் தெரிவிக்க வேண்டுமோ? சென்ற ஹேவிளம்பிஷு மார்கழிமீ" பூர்வபல்குநீ நக்ஷத்ர நன்னாளில் இந்த ஸ்வாமிக்கு ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் திருக்குடந்தையில் இவருடைய திருமாளிகையில் பக்தவர்க்கங்களால் வெகு சிறப்பாக நடத்திவைக்கப் பட்டதென்பது உலகமறிந்தது. அந்த மஹோத்ஸவத்தின் ஓர் ஞாபக சின்னமாக ஸ்ரீ பராங்குச பக்த ஸபையாரால் அச்சிடுவித்து வெளியிடப்பட்டது—"அபர்யாப்தாம்ருத மங்களாசாஸன ஸ்தோத்திர வுரை." திருக்குடந்தைதேசிகனென்றும் ஸ்ரீமத்

கோபால மஹாதேசிகனென்றும் ப்ரஸித்தரான மஹா ஸ்வாமி ஸாதித்தது மூலம். அதற்கு மிக விரிவான உரை இயற்றியவர் நம் இளையவில்லி ஸ்வாமி. மூலம் நான்கு ச்லோகங்களே கொண்டது. உரைகாரர் தம்முடைய ஞானப்பெருமையினால் அவற்றை விரித்துரைத்தது மெச்சத்தக்கது. உரைகாரரான இந்த ஸ்வாமிக்கு ஆராவமுதனிடத்தில் அபர்யாப்தமான அபிநிவேசமாதலால் அவ்வபிநிவேசாதிசயமானது சில விடங்களில் அதிவாத ஸரணியிலும் எழுதச் செய்துவிடுகிறது. இவ்விஷயம் பரமரஸிகர்களுக்கு ரஸ்யமாகுமென்று இங்குச் சிறிது விவரிக்கிறேன்.

முதல் ச்லோகத்தில் "சடரிபுமுநிஸூக்தி ஸ்ரீமதாம்நாயவாசாம் அக்ருதகவசநாநாஞ்ச அதிகல்யாண கோஷை:* என்றவிடத்திற்கு உரையெழுதுகையில்

"தென்மொழிவேத வொலியும் வடமொழி வேத வொலியும் இவ்வாசிரியர் வேண்டுகோளின்படி திருக்குடந்தைத் திருமாமணி மண்டபத்திலேதான் அநுபவிக்க உரியதோ வென்னில்; அன்று, இங்கு ஆராவமுதனையநுபவித்து அங்கு திருநாடேறச் சென்றும் * ஆராவமுதமங்கெய்தி * என்கிறபடி ஆராவமுதனின் அநுபவம் வாய்க்கும் போதும் இருமொழி வேதங்களின் அநுபவமே."

என்றெழுதப் பட்டுள்ளது. மேலே உதாஹரித்த உரைவாக்கியத்தில் எடுத்தாளப்பட்ட * ஆராவமுதமங்கெய்தி * என்னும் ஸ்ரீ ஸூக்தியானது சிறிய திருமடலிலுள்ளது. புருஷார்த்தங்கள் தர்மார்த்த காமங்கள் மூன்றேயொழிய மோக்ஷமென்பது கிடையாதென்று [அர்ச்சாவதாரப்ராவண்யாதிசயத்தினால்] ப்ரதிஜ்ஞைபண்ணி, மோக்ஷத்தின் அஸத்பாவத்தை உபபாதிக்கும் ப்ரகரணத்திலுள்ளதான *ஆராவமுதமங்கெய்தி* என்கிற அந்த ஸ்ரீஸூக்தியானது க்ஷேபத்திலேயானது. அதாவது, அங்கு *ஆராவமுதம் கிடையாதென்று திருவுள்ளம்பற்றி, அது அங்கிருப்பதாகச் சொல்வது பரிஹாஸ்யம் என்கிறாராயிற்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் இது மிகப்பொருத்தமாகக்காட்டப்பட்டுள்ளது. வியாக்கியானஸூக்தி;

"[ஆராவமுதமங்கேய்தி.] திருநறையூர் இங்கே, திருவாய்ப்பாடி இங்கேயாயிருக்க ஆராவமுதம் அங்கேயாவது என்? என்கை. பணைமடலும் திருநறையூரும் இங்கே யிருக்கச்செய்தே அங்கு எத்தைக்கொண்டு எத்தைப்பெறுவதென்கை." என்று.

உண்மையில் இங்கு திருமங்கையாழ்வாருடைய திருவுள்ளம்—திருநாட்டில் ஆராவமுதம் அஸம்பாவிதம் என்பதேயாம். இதுதானே பிரகரணத்திற்குச் சேரும். நம் இளையவில்லி ஸ்வாமி இவ்வர்த்தவுண்மையை யறியாதவரல்லர். ஆயினும் ஆராவமுதனிடத்தில் பொங்கும்பரிவாலே இங்ஙனமெழுதினரென்று நாம் இதனை உகந்து எழுதினோமேயன்றி மறுப்புமுறையில் எழுதினோமல்லோம். முக்கியமாக இவ்வுரையினால் இவ்வாசிரியருடைய அபர்யாப்தாம்ருத பக்திப்பெருங்காதல் மிகத்தெளிவாக விளங்குகின்றது. இதன் விலை 50 நயாபைஸா. உரையாசிரியரிடத்தும் ஸ்ரீ பராங்குச பக்த ஸபையாரிடத்தும் கிடைக்கும். .... (*)

## வைதிக லௌகிக மஹநீய மண்டலி.

இப்பெயர்பூண்ட புத்தகம் வெளிவரப்போகிறதென்பதை ஏற்கெனவே அன்பர்கள் அறிந்துள்ளார்கள். இது நேற்று விஜயதசமியன்று வெளியாகிவிட்டது. இதில், வைகுண்டவாஸிகளும் வர்த்தமானர்களுமான பல மடாதிபதிகள், பல வித்வான்கள், பல

லௌகிகமஹநீயர்கள் தங்களுடைய மிகவழகிய உருவப்படங்களினுல் காட்சி தருகிறுர்கள். அனேக ஸமஷ்டிகோஷ்டிகளின் படங்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவ்வளவு மட்டுமேயன்று. இடையிடையில் லோகாபிராமங்களும் சாஸ்த்ராபிராமங்களுமான பல வியாஸங்கள் வடமொழி தென்மொழிகளில் சேர்க்கப்பட்டிருப்பது மிகப்பெரிய விசேஷம். இக்காரணத்தினுல் இப்புத்தகம் மூன்றுவிதமாக பயிண்டு செய்யப்பட்டுள்ளது.

1. வடமொழி தென்மொழி வியாஸங்களெல்லாவற்றையும் கொண்டது. விலை 3 ரூ.
2. தென்மொழி வியாஸங்களை மட்டும் கொண்டது. விலை 2 ரூ.
3. வடமொழி வியாஸங்களை மட்டும் கொண்டது. விலை 2 ரூ.

[எல்லாவற்றிலுமே உருவப்படங்களுண்டென்பதை நாம் தனிப்படஎழுதவேணுமோ?]

புத்தகத்தின் தபால்செலவுமட்டும் ஒரு ரூபாயாகும். அபேக்ஷயுள்ளவர்கள் விவரம் தெரிவித்து முன்பணமனுப்பவேணுமேயொழிய வி. பி. மூலம் அனுப்பும்படி எழுதவேண்டா.

**க்ரந்தமாலா ஆபீஸ்,**
**விஷ்ணு காஞ்சீபுரம்.**

---

## ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்.

88. M. N. பேரருளாளன், திருநெல்வேலி, டவுன்.
89. N. வீரராகவலு நாயுடு, ஸப்ரிஜிஸ்ட்ரார், மதுராந்தகம்.
90. M. தேவராஜுலு நாயுடு, Rtd. Head Post Master, மதறாஸ்.
91. ஆயி. நரஸிம்மாச்சார், ஸ்ரீரங்கபட்டணம்.
92. S. சுந்தரராஜன், இராகுட் காலனி, ஒரீஸா.
93. R. கிருஷ்ண ஐயங்கார், அரக்கோட்டை, கண்ணங்குடி போஸ்ட்.
94. K. கிருஷ்ணமாச்சாரியார், B.A., சிக்பல்லாபூர்.
95. N. ரங்கஸ்வாமி ஐயங்கார், அட்வகேட், வேலூர்.
96. புக்குட்டி. ஜானகி அம்மாள், ஆழ்வார் திருநகரி.
97. K. S. S. ராமாநுஜம், கல்கத்தா, 29.
98. T. வரதராஜன், திருநெல்வேலி ஜங்ஷன்.

---

## அறிவிப்பு

நிகழும் 1958-ஆம் வருஷத்திற்காக இதுவரை 10 ஸஞ்சிகைகள் வெளியாகிவிட்டன. இன்னும் இரண்டு ஸஞ்சிகைகளே மிகுதி. அவையும் க்ரமேண வெளிவரவே போகின்றன. இதுவரையில் 98 நபர்களே சந்தா செலுத்தி யிருக்கிறுர்கள். இதில் பத்ரிகையின் நிர்வாஹம் எவ்வாறு நடைபெறுமென்பதை அவரவர்களே ஆலோசிக்க வேண்டும். நாம் கடிதமெழுதி நிர்ப்பந்திக்க வேணுமென்று மஹான்கள் நினைத்திருக்கிறுர்கள் போலும். அப்படி நினைப்பது வேண்டாவென்று தெரிவித்து நிற்கிறேம்.

—மானேஜர்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கூரத்தாழ்வானும் சோழராஜனும்

**(ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் — ஜகதாசார்யர்)**

---

"**ஆசாரிய ஸ்வாமிகள் சென்னை உபந்நியாசங்கள் 1957—58 கலைமகள் வெளியீடு**" என்கிற புத்தகம் 176 பக்கங்கள் கொண்டது கண்டோம். ஸ்ரீகாமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமிகளவர்கள் இரண்டொரு வருஷமாக சென்னைமாநகர் விஜயஞ்செய்து அங்கு பல்பாகங்களில் பக்தர்கள் வாழ உபந்நியாஸங்களைச் செய்து வருகிறார்களென்பதை யாவருமறிவர். தேனும் பாலுமமுதுமாகிய அவ்வுபந்யாஸங்களை நேரில் கேட்டுக்களிக்க பாக்கியமில்லாதவர்களுக்கு அவ்வுபந்யாஸங்கள் புத்தக ரூபமாகக் கிடைக்கும்படி மஹான்கள் செய்துவருகிறார்கள். இதுவும் ஒரு மஹோபகாரமே. தற்காலம் நமது கையில் கிடைத்திருக்கும் மேலேகுறித்த புத்தகத்தில் முன்னுரையை நாம் வாசித்துக்கொண்டு போகும்போது,

> "கூரத்தாழ்வார் *சிவாத் பரதரம் நாஸ்தி* என்பதற்கு *அஸ்தி த்ரோணம் அத: பரம்* என்று சொன்னதாக ஒரு வரலாறு உண்டு; சாந்த முனிவராகிய ஆசார்ய ஸ்வாமிகள் அதற்கு ஒரு புதியபொருள் கற்பித்துச் சொல்லியிருக்கிறார்கள். 'சிவனுக்குமேல் தும்பை மலர் இருக்கிறது என்று நான் பொருள் செய்துகொள்கிறேன்' என்று அந்தக்கதையில் வரும் காரத்திலே நெய் ஊற்றியிருக்கிறார்கள்"

என்கிற வாக்கியங்களை வாசித்தேன். உடனே, இது ஸம்பந்தமாக ஆசார்ய ஸ்வாமிகள் பேசியிருப்பதைப் படிக்கவேணுமென்கிற ஆவல் கிளர்ந்து அந்த இடத்தைத்தேடியெடுத்து வாசித்தேன். பக்கம் 31, 32, 33 களில் இவ்விஷயம் காணப்பட்டது. ஸ்ரீராமாநுஜர் காலத்தில் கூரத்தாழ்வானென்னுமாசாரியர் சோழராஜஸபைக்கு எழுந்தருளின செய்தியைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஆரம்பம் என்னவென்றால்;

> "ராமாநுஜாசாரியர் ஒரு சமயம் 'நமக்கு விஷ்ணுவைத் தவிர வேறு ஸ்வாமி இல்லை; அவன்தான் நமக்குப் பெரியவன்; ஏகாந்தமாக அவன் ஒருவனைத்தான் பூஜை பண்ண வேணும். சிவன்கோயிலுக்குப் போகக்கூடாது, சிவனைக் கொண்டாடக்கூடாது' என்று உபதேசம் பண்ண ஆரம்பித்தார். இந்தக் கொள்கையுள்ளவர்களுக்கு ஏகாந்திகள் என்று பெயர். ஏகம் தான் அந்தம். நமக்கு ஒரு பெருமாள் என்றால் போதும்; இதர தெய்வங்களையெல்லாம் உபாசிக்க வேண்டாம், தேவதாந்தரமே கூடாது."

என்பது முதல் பாராவாகக் காணப்பட்டது. இந்த பாராவின் முடிவில் 'இதர தெய்வங்களையெல்லாம் உபாசிக்க வேண்டாம், தேவதாந்தரமே கூடாது' என்பது ஆசாரிய ஸ்வாமிகளின் அபிப்ராயமா? அல்லது ஸ்ரீராமாநுஜாசார்ய ஸ்வாமிகளின் உபதேச வாக்கியமா? என்பது ஆராயப்படவேண்டும். வாக்கியங்களின் அமைப்பு ஒழுங்காக இல்லை. அறிஞர்கள் எழுதியதாகத் தெரியவில்லை. ஸந்தர்ப்பத்தை நோக்குங்கால் இது ராமாநுஜருடைய உபதேச வாக்கியமாகவே ஆசார்யஸ்வாமிகளால் அநுவாதம் செய்யப்பட்டிருப்பதாக எண்ணவேண்டியதாகிறது. மேலே, "இப்படி யிருக்கிறபோது சிவன் கோயிலுக்குப் போகக்கூடாதென்று ராமாநுஜர் ஒரு தனியான மதத்தைப் பிரசாரம் பண்ண ஆரம்பித்தது சோழராஜாவுக்குத் தெரிந்தது" என்கிற வாக்கியம் காணப்படுகிறது. இதற்கு மேலுள்ள வாக்கியங்களைப்

பற்றி நாம் பரிசீலனை செய்வதற்கு முன் இந்த வாக்கியம் வரையில் பிராமாணிகர்களுக்குத் தெரிவிக்கவேண்டியவற்றைத் தெரிவிக்கிறோம்.

ஆசார்ய ஸ்வாமிகள் இவ்விஷயத்தைப் பேசத்தொடங்குகையில் “ராமாநுஜாசாரியார் ஒரு சமயம்” என்று தொடங்கியிருக்கிறார்கள். இதனால் ஸ்ரீராமாநுஜர் திடீரென்று ஒரு நாள் இப்படி உபதேசம் செய்ய முன்வந்ததாகக் காட்டப்படுகிறதல்லவா? இது சரியாகுமோ? அவர் உபதேசித்ததாகச் சொல்லப்படுகிற வாசகங்கள் ஸ்ரீவைஷ்ணவாசார்ய பரம்பரையில் தொன்றுதொட்டு உபதேசிக்கப்பட்டு வருவதேயொழிய, ஸ்ரீராமாநுஜரால் திடீரென்று ஒரு சமயம் உபதேசிக்க ஆரம்பம் செய்யப்பட்டதன்று. ஸ்ரீராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசார்யர்களும், அவர்களுக்கும் முற்பட்ட ஆழ்வார்களும் கைப்பற்றியிருந்த மார்க்கத்தையே ஸ்ரீராமாநுஜர் தாமும் தழுவியிருந்தார். திருமந்திரார்த்தம் முதலானவை உபதேசிக்க ப்ராப்தமாகுங் காலங்களில் திருமந்திரத்தில் முதற்பதமான ப்ரணவத்தில் இடையெழுத்தாகிய உகாரத்தின் பொருளை விவரித்து உபதேசிக்குமிடத்து “அந்யசேஷத்வ நிவ்ருத்தியைச் சொல்லுகிறது உகாரம்” என்று சொல்லத் தொடங்குவதும், ஸ்ரீமந்நாராயணனை மறந்தாலும் மறக்கலாம்; தேவதாந்தரங்களை நினைக்கலாகாது என்று சொல்லுவதும் ப்ரமாணகதியில் நிலைநின்ற ஆசாரியர்களுக்கு உற்றது.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் யமகிங்கரஸம்வாதத்தை யெடுத்துரைக்கிற பிரகரணத்தில் யமன் தன்னுடைய கிங்கரனுக்குக் கட்டளையிடுவதைக் கூறுகின்ற “ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே, பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்”. என்கிற ச்லோகத்தைத் திருமழிசையாழ்வார் தம்முடைய நான்முகன்திருவந்தாதியில் “திறம்பேல்மின்கண்டீர் திருவடிதன்நாமம், மறந்தும் புறந்தொழாமாந்தர்—இறைஞ்சியும், சாதுவராய்ப்போதுமின்களென்றான் நமனும் தன் தூதுவரைக் கூவிச் செவிக்கு” என்னும் பாசுரத்தினால் மொழிபெயர்த்திருக்கின்றார். இதில் ஒரு விசேஷமுள்ளது; அஃதென்னவெனில்; யமன் தன்கிங்கரனை நோக்கி நீ மதுஸூதந ப்ரபந்நர்களிடம் அணுகவேண்டாமென்று கட்டளையிட்டதாக நாம் மேலே யெடுத்துக்காட்டிய ஸ்ரீவிஷ்ணுபுராண ச்லோகத்தில் உள்ளது. மதுஸூதந ப்ரபந்நர்கள் என்றால் பகவானையடிபணிந்தவர்கள் என்று பொருள். ஆனாலும் இதற்கு இவ்வளவே பொருளன்று என்றும், உண்மைப் பொருளை உலகுக்கு உணர்த்தவேணுமென்றும் கருதிய திருமழிசையாழ்வார் “திருவடிதன்நாமம் மறந்தும் புறந்தொழாமாந்தர்” என்ற ஸ்ரீஸூக்திவிசேஷத்தினால் உணர்த்தியருளினார். இவ்விடத்தில் நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையிலுள்ள விவரணத்தை அப்படியே யெடுத்துக் காட்டுகிறோம், தெளிவு பிறப்பதற்காக;

“[திருவடிதன்நாமம்மறந்தும் புறந்தொழாமாந்தர்] அடியென்றும் அடிகளென்றும் திருவடியென்றும் ஸ்வாமிக்கு வாசகம்; ஸர்வஸ்வாமியான எம்பெருமானுடைய திருநாமத்தை என்றபடி. *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்னுமிந்த ஸ்ரீஸூக்தியின் போக்யதை ஆழ்ந்து அநுபவிக்கத்தக்கது. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தாலு மிருக்கலாம், இல்லாமற்போனாலும் போகலாம், தேவதாந்தரங்களிடத்தில் பற்றில்லாமையே முக்கியம். ஒருத்தி தன் கணவனிடத்தில் அன்புகொள்ளாமலிருக்கினு மிருக்கலாம்; நாளடைவில் ஆநுகூல்யம் ஏற்படக்கூடும். வேறு புருஷனிடத்தில் அன்புகொண்டால் அவத்யமாகுமே; அதுபோலவென்க. முமுக்ஷுப்படியில் உகாரார்த்தம் விவரிக்குமிடத்து ‘அந்ய சேஷத்வம் கழிகையே ப்ரதானம்; தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை. பகவத்சேஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே

ப்ரதானம். *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்கையாலே' என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இங்குக் குறிக்கொள்ளத்தக்கன." என்பன நம்முடைய திவ்யார்த்ததீபிகையுரை வாக்கியங்கள்.

ஆக, ஸ்ரீஅஷ்டாக்ஷர மஹாமந்திரத்தின் பொருளை நிர்வஹிக்கின்ற ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் யாவரும் 'ஸ்ரீமந்நாராயணனொருவன் தவிர மற்ற எவர்க்கும் சேஷப்படத்தகாது' என்பதையே நிர்த்தாரணம் செய்து உபதேசித்து வருகிறார்களென்பது தெரிவிக்கப்பட்டதாயிற்று. இவ்விஷயத்தை ஸ்ரீராமாநுஜர் ஒரு சமயம் உபதேசிக்க ஆரம்பித்தார் என்பது 'ஸ்ரீராமாநுஜர் ஒருநாள் தீர்த்தம் பருக ஆரம்பித்தார்; ஒருநாள் ப்ரஸாதம் ஸ்வீகரிக்கத் தொடங்கினார்; ஒருநாள் ஸந்தியாவந்தனம் செய்யப்புகுந்தார்; என்னுமாபோலே யிருக்கவில்லையா?

மேலும் முக்கியமான விஷயம் ஒன்று குறிக்கொள்ளவேணும். ஆசார்யஸ்வாமிகளின் ப்ரக்ருத உபந்யாஸத்தில் கூரத்தாழ்வானைப்பற்றியும் சோழராஜனைப்பற்றியும் தெரிவிக்கப்படுகின்ற இதிஹாஸம் ஸ்ரீவைஷ்ணவாசார்யர்களின் குருபரம்பராப்ரபாவம் முதலிய புராதன நூல்களிலுள்ளதேயன்றி வேறு எந்த மதத்தினரும் இக்கதையை எழுதியிருக்கவில்லை. ஸ்ரீராமாநுஜர்காலத்திலேயே யிருந்த கருடவாஹன பண்டிதரென்பவர் இயற்றிய திவ்யஸூரிசரிதமென்கிற வடமொழி காவ்யத்திலும், அதற்குப்பிறகு தோன்றிய ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்திலுந்தான் இவ்வரலாறு உள்ளது. வைஷ்ணவர்களோ வைஷ்ணவேதரர்களோ யாரும் இக்கதையை மேலே குறித்த நூல்களைக்கொண்டே தெரிந்துகொள்ள வேண்டியிருப்பதால் அவற்றிலுள்ளபடிக்கு மாறாகக் கதையை அநுவாதம் செய்வது பொருந்தாது. அது ப்ராமாணிகபத்ததியன்று. அவற்றிலுள்ள வரலாறு யாதெனில்; ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில்—

"இப்படி ஸர்வரையும் விசேஷகடாக்ஷம் செய்து கொண்டும், கூரத்தாழ்வான், முதலியாண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலான முதலிகளுக்கு ஸ்ரீபாஷ்யம் ப்ரஸாதியா நின்று கொண்டும் ஸுகமே வாழ்ந்தருளுகிற காலத்திலே ராஜ்யம் பண்ணுகிற சோளராஜா துச்சைவனாகையாலே வேதவிருத்தமான கள்ளப்பொய்ந்நூலாகிய சைவாகமத்தை த்ருடதரப்ரமாணமான மெய்ந்நூலென்று அத்யவஸித்து, தானும் தன் புரோஹிதனுமாகக் கூடவிருந்து தன்னுடைய நாட்டிலுள்ள வித்வான்களையெல்லாம் திரட்டி *சிவாத் பரதரம் நாஸ்தி* என்று ஓலைக்கு எழுத்திடச்சொல்லி (அப்படி யெழுதாதவர்களை)த் தண்டிக்க, சிலர் அவனுடைய ஆஜ்ஞைக்கு அஞ்சியும் சிலர் அர்த்தக்ஷேத்ராதிகளை யாசைப்பட்டும் எழுத்திட்டார்கள். இதைக்கண்ட நாலூரான் 'இந்த ஆபாஸர் இட்டதனால் என்ன ப்ரயோஜனமுண்டு? இராமாநுசனும் கூரத்தாழ்வானும் இட்டாலன்றோ இட்டதாவது?' என்ன, சோழனும் அப்பொழுதே சில மநுஷ்யரைப் பார்த்து 'இராமானுசனை யழைத்துக் கொண்டு வாருங்கோள்' என்று கோயிலுக்கு வரக்காட்ட, அந்த ராஜமநுஷ்யர் உடையவர்மடத்து வாசலிலே வந்து 'இராமாநுசன் எங்கே?' என்று கேட்க, இச்செய்தியை உடையவருக்கு நீராடத் திருமஞ்சனம் முகந்து கொடுக்கிற கூரத்தாழ்வான் திருச்செவியிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்து ரஹஸ்யமாக விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வானும் உடையவருடைய த்ரிதண்ட காஷாயாதிகளைத் தரித்துக்கொண்டு உடையவருக்கும் விண்ணப்பஞ் செய்யாதே ராஜமநுஷ்யருடன் போகத்தேட, அவ்விசேஷங்கேட்டு ஆழ்வானுடனே பெரியநம்பியும் புறப்பட்டு எழுந்தருள, அவர்களை யழைத்துக்கொண்டு போனார்கள்."

என்றுள்ளது. இதற்கு மேலுள்ள வரலாறுகளைப் பற்றிப் பிறகு எடுத்துக் கொள்வோம். மேலே குறித்த வரலாறு கருடவாஹன பண்டிதரியற்றிய திவ்யஸூரிசரிதத்தில் பதினெட்

டாவது ஸர்க்கத்தில் எழுபத்தோராவது ச்லோகம் முதலாகச் சில ச்லோகங்களினால் தெரிவிக்கப்பட்டுள்ளது. இவற்றால், "ஸ்ரீராமாநுஜர் திடீரென்று ஒரு தனியான மதத்தைப் பிரசாரம் பண்ண ஆரம்பித்தது சோழராஜாவுக்குத் தெரிந்து அதன்மேல் சபைகூட்டி நிர்த்தாரணம் செய்ய அவ்வரசன் ஆசைப்பட்டதாக" ஆசாரிய ஸ்வாமிகள் வரலாறு கூறியிருப்பது எப்படி பிராமாணிகமாகும். மூர்க்கனான அரசன் தன்னுடைய கொடுங்கோன்மையினால் அவரவர்களைத் தன்னிடம் வரவழைத்து *சிவாத் பரதரம் நாஸ்தி* என்று கையெழுத்திடச்சொல்லுவதும், சிலரைப் பயமுறுத்தியும், சிலரைப் பொருள்தந்து வசப்படுத்தியும் கையெழுத்திடச் செய்வதும், அங்ஙனமிடாதவர்களைத் தண்டிப்பதுமாயிருந்தான்—என்பதுதான் உண்மையான கதை. இதுநிற்க,

இதற்குமேல் ஆசார்யஸ்வாமிகள் பேசியிருப்பது என்னவென்று பார்ப்போம்.

"விஷ்ணுவைத்தவிரக் கடவுள் இல்லையென்றும் தேவதாந்தரமே கூடாதென்றும் இந்த ராமாநுஜர் ஒருமதம் பண்ணிவிட்டாரேயென்று வித்வான்களுக்கும் ராஜாவுக்கும் தோன்றியது; அது சாஸ்திரமாக இருந்தால் அவரையே கூப்பிட்டுக் கேட்போமென்று அவரையழைத்து வரும்படியாக மஹாராஜா ஆள் அனுப்பினான்.........அவரை அழைத்து வந்து சபையைக்கூட்டி இந்த விஷயத்தை நிர்த்தாரணம் பண்ணவேண்டும் என்பது ராஜாவினுடைய ஆசை."

என்று பேசப்பட்டிருக்கிறது. உண்மையான வரலாறு இப்படியில்லை. பண்டித ஸபை கூட்டி விசாரம் செய்து தத்வநிர்த்தாரணம் பெறவேணுமென்கிற ஆசை ராஜாவுக்கு இருந்தால். இதில் ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக்கு அச்சமுண்டாக ப்ரஸக்தியே கிடையாது. *பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தானென்று, ஈண்டிய சங்கமெடுத்தூத வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்தான்* என்கிற பெரியாழ்வாருடைய கதை ப்ரபஞ்ச ப்ரஸித்தம். யஜ்ஞமூர்த்தி முதலான அத்வைதிகளான பிரபல பண்டிதர்களை வாதப்போரில் வென்று *பாஷண்டத்ருமஷண்ட தாவதஹநச் சார்வாகசைலாசநி: பௌத்த த்வாந்தநிராஸவாஸரபதி: ஜைநேபகண்டீரவ:, மாயாவாதிபுஜங்கபங்ககருட: த்ரைவித்யசூடாமணி: ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி:* என்று நாற்றிசையும் போற்ற விளங்கின ஸ்ரீராமாநுஜர், வித்வான்கள்கூடி விசாரணை செய்யும் ஸபையாயிருந்தால் அந்த ஸபைக்கு எழுந்தருள அஞ்சவேண்டிய அவசியமே கிடையாது. *தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே பொற்கற்பகம் எம்மிராமாநுசமுனி போந்த பின்னே* என்று நூற்றந்தாதியிலும்; *சாறுவாகமத நீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்து மிகு சாங்கியக் கிரிமுறித்திட, மாறுசெய்திடு கணாத வாதியர்கள் வாய்தகர்த்து அறமிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும்வகை வாது செய்த வெதிராசனார், கூறுமாகுரு மதத்தொடோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல் கொடிய தற்கசரம் விட்டபின் குறுகி மாயவாதியரை வென்றிட, மீறி வாதில்வரு பாக்கரன் மதவிலக்கடிக் கொடியெறிந்துபோய் மிக்க யாதவமதத்தை மாய்த்த பெருவீரர் நாளும் மிக வாழியே* என்று ஆர்த்திப்பிரபந்தத்திலும் போற்றப்பட்ட சீரியசிங்கமன்றோ ஸ்ரீராமாநுஜர். ஆகவே வித்வத் ஸபைகூட்டி விஷயநிர்த்தாரணம் செய்ய அரசன் ஆசைப்பட்டதாக எழுதியிருப்பது ஆசார்யஸ்வாமிகளின் பேச்சாயிருக்க நியாயமில்லை. காபியெடுத்தவர்களின் கைச்சரக்கேயிது.

வித்வான்களைத் திரட்டி ஸபைகூட்டினால் அந்த வித்வான்கள் வேதமோதினவர்களாகவே யிருக்கவேண்டும். வேதத்தில் (தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதயில்) ஐந்தாவது

காண்டம் ஐந்தாவது ப்ரச்நத்தில் "அக்நிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" என்றுள்ள வாக்கியத்தை அவர்கள் அறிந்திருக்கமாட்டாதவர்களன்றே. பரம: என்கிற பதம் ஸாமாந்யமான தன்று ; பர: மா அஸ்மாத் இதி பரம: ; மா என்றது (ந) என்றபடி, தன்னிற்காட்டிலும் மேற்பட்ட தெய்வமில்லாதது எதுவோ அது பரமம். அப்படிப்பட்ட தெய்வம் ஒன்றுதானிருக்க முடியுமேயொழிய இரண்டு மூன்று இருக்கமுடியாதே, *ஏகமேவ அத்விதீயம்* என்கிற ச்ருதியைத் திடமாகப் பற்றிக்கொண்டு வாதிக்கின்றவர்கள் 'அந்த தெய்வமும் பரமம், இந்த தெய்வமும் பரமம்' என்றுபேச வழியில்லையே. எது பரதெய்வமென்று கேட்டால் ஒன்றைத் தான் பரதெய்வமென்று சொல்லித் தீரவேண்டும். சிவனையே பரதெய்வமென்கிறோமென்னில் ; தாராளமாகச் சொல்லுங்கள். அவ்வளவோடு நில்லுங்கள். நாராயணனருகே வராதீர்கள். ஆனால் இந்த வாதத்தை ஆதிசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸஹிப்பவரல்லர் ; அவருடைய க்ரந்தங்கள் லோபிக்கவில்லையே, எடுத்துப் பார்க்கலாமே. ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யமோ, கீதாபாஷ்யமோ, ஸஹஸ்ரநாமபாஷ்யமோ எதையும் எடுத்துப் பார்க்கலாமே. ஸ்தாலீபுலாகந்யாயேந நாமே யெடுத்துக் காட்டுவோமிங்கு.

*உத்பத்த்யஸம்பவாத்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தில் "தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி ஸ்ரீபாஞ்சராத்ர ப்ரமேயமாக மூன்று விஷயங்களைத் தெரிவித்து இரண்டு விஷயங்களில் தம்முடைய ஸம்மதியைக்காட்டி ஒரு விஷயத்தில் மட்டும் அஸம்மதியைக்காட்டி முடித்திருக்கிறார். ஸம்மதங்களாகத் தெரிவிக்கப்பட்ட இரண்டு விஷயங்கள் எவையென்னில், நாராயணனே பரதெய்வமென்பது ஒன்று ; அநந்யசித்ததையோடு நாராயணனைச் சிந்தை செய்வதே மோக்ஷஸாதனமென்பது மற்றொன்று. இங்கு நாராயணனை அநந்யசித்ததையோடு சிந்தனை செய்வதென்கிற திவ்யஸூக்தியை இவர்கள் நிஷ்கபடமாகச் சிந்தை செய்யவேணும். பரதைவத்தோடு கூடவே தேவதாந்தரத்தையும் சிந்தனை செய்தால் அநந்யசித்ததைக்கு இடமேது ? கீதாசார்யன் எட்டாவது அத்யாயத்தில் *அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த !* என்றருளிச் செய்கிறான். இதற்குமேல் ஒன்பதாமத்யாயத்தில் *அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே* என்று தொடங்கியுள்ள நான்கு சுலோகங்கள் [22—25] மருளை வேரறுப்பன. அங்கு சங்கர பகவத் பாதாளுடைய பாஷ்யம் ஸ்ரீராமானுஜ பாஷ்யத்தைவிட மிகத் தெளிவு பெறுத்துமவை. மூலத்திலும் ஸ்ரீராமானுஜ பாஷ்யத்திலும் நாராயணசப்தம் காணக்கிடைக்கவில்லை ; சங்கர பாஷ்யத்தில்தான் அது புஷ்கலமாகவுள்ளது. "பரம் தேவம் நாராயணம்" என்பது சங்கர பாஷ்யபங்க்தி. இங்கு இது ஒரு பெரிய விஷயமன்று ; *யேப்யந்ய தேவதாபக்தா யஜந்தே* என்கிற அடுத்த ச்லோகத்தின் சங்கரபாஷ்யம கவனிக்க வேணும். "நநு அந்யா அபி தேவதா: த்வமேவ சேத் தத்பக்தாச்ச த்வாமேவ பஜந்தே, ஸத்யம்......" இத்யாதி. இங்குச் சொல்லப்படுகிறதென்னவென்றால் ; இதர தேவதைகளும் நீதானே ; உன்னைக்காட்டிலும் வேறுபட்டவர்களல்லரே ; அப்படியிருக்க இதர தேவதா பக்தர்களும் உன்னையே பஜித்தவர்களாக ஆகிறார்களன்றோ ? இதர தேவதா பஜனம் கூடாதென்பதேன் ? என்று அர்ஜுனன் கண்ணனைக் கேட்பதாகவும் அதற்குக் கண்ணன் மறுமொழி கூறுவதாகவும் அவதாரிகை வைத்திருக்கிறார். இக்கேள்வி ஸரிதான் ; இதற்குக் கண்ணன் என்ன பதில் சொன்னதாக பாஷ்யமுள்ளது ? என்று கவனிக்க வேணும். இதுவன்றோ தலையான விஷயம். மூலத்தில் *தேபி மாமேவ கௌந்தேய யஜந்தி* என்று சொல்லிவிட்டு உடனே 'அவிதி பூர்வகம்' என்று சொல்லப்பட்டுள்ளது. "அவிதி: அஜ்ஞாநம்; தத்பூர்வகம் யஜந்தே இத்யர்த்த:" என்று சங்கர பாஷ்யம். மேலே 25-ஆம் ச்லோகத்தின் பாஷ்யத்தில் இது விசதீகரிக்கப்பட்டிருக்கின்றது. "ஸமாநேபி ஆயாஸே மாமேவ ந பஜந்தே அஜ்ஞாநாத் ; தேந தே அல்பபலபாஜோ பவந்தீத்

யர்த்த:” என்பது இந்த ப்ரகரணத்தில் முடிவான சங்கரபாஷ்யம், ‘ஆராதிக்கிற ச்ரமம் துல்யமாயிருக்கச் செய்தேயும் நாராயணனை என்னையே ஸாக்ஷாத்தாக பஜியாமல் அஜ்ஞானத்தாலே தேவதாந்தரபஜனம் பண்ணுமவர்கள் அற்பபலனைப் பேற்றொழிகிறார்கள்’ என்று பகவத்பாதாள் தமது திருக்கையாலே எழுதி வைத்திருக்கிறார்கள். நாராயணனைத்தவிர வேறு தெய்வத்தைப் பஜிக்கத்தகாதென்பதே பகவத்பாதாளுடைய திடமான அத்யவஸாயம்.—என்பது இதனால் விளங்கவில்லையா? ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் முதலிய நமது பல நூல்களில் இதை விவரித்திருக்கிறோமாதலால் இங்கு விரிவு வேண்டாவென்று விடுக்கப்பட்டது. 25-ஆம் ச்லோகத்தின் பாஷ்யத்தில் “மத் யஜநசீலா வைஷ்ணவா மாமேவ யாந்தி” என்றெழுதப்பட்டிருப்பதால் இங்கு ‘வைஷ்ணவா:’ என்று விசேஷித்து நிர்தேசித்திருக்கையாலே இது ஸ்ரீவைஷ்ணவர்களைப்பற்றி யெழுதினதேயொழிய ஸ்மார்த்தர்களான எங்களைப்பற்றி யெழுதியதன்று என்று ஒரு அத்வைதி வித்வான் கூறினர். அதுதான் உண்மையோவென்றும் நமக்கு ஜிஜ்ஞாஸையுண்டு. ஏவஞ்ச, ஸ்ரீராமாநுஜர் அநாதி வைதிக ஸித்தாந்தத்தை பிரசாரம் செய்து வந்தாரேயொழிய, தாம் புதிதாக ஒரு அபூர்வகல்பனையைச் செய்தவரல்லர். தமது ஸித்தாந்தத்தை அவர் ஆயிரக்கணக்கான மதாந்தரஸ்த பண்டிதர்களின் முன்னிலையில் வாதப்போர் நிகழ்த்தி நிலைநாட்டி, “நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன, நாரணனைக்காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்டமிழ் மறைவாழ்ந்தது மண்ணுலகிலிட்டிய சீலத்திராமாநுசன்தன் இயல்வு கண்டே” என்னும்படி யெழுந்தருளியிருக்க, அவர் வித்வத்ஸபைக்கு விஜயஞ்செய்ய அஞ்சினார் என்பதாகச் சொல்லுவது யுக்தமாகுமா? ஈஷத்தும் யுக்தமாகாது. ஆகவே “ஸ்ரீராமாநுஜரை யழைத்து ஸபைகூட்டி நிர்த்தாரணம் பண்ண வேண்டுமென்பது அரசனுடைய ஆசை” என்று எழுதப்பட்டிருப்பது யுக்தமல்லவென்று முடிந்தது.

இதற்குமேல், கூரத்தாழ்வான் ஸ்ரீராமாநுஜரிடம் ஏதோ சொன்னதாக எழுப்பட்டிருப்பதும் சிறிது ஆராயத்தக்கது.

> “கூரத்தாழ்வார் ராமாநுஜரைப் பார்த்து ஸ்வாமிந்! நீங்களோ சிவன்கோவிலுக்குப் போகக்கூடாது என்கிறீர்கள், சிவனைத் தொழக்கூடாதென்கிறீர்கள்; அரசன் சைவன். சிவாலயங்களெல்லாம் கட்டியிருக்கிறான். அவனுடைய அனுஷ்டானத்திற்கு நீங்கள் அபசாரம் செய்கிறீர்கள்.”

என்கிற வாக்கியம் (பக்கம் 32ல்) காணப்படுகிறது. (இடையில் ஒன்று தெரிவிக்கிறோம்; கூரத்தாழ்வார் என்பது தவறு, கூரத்தாழ்வான் என்பதே திருநாமம். இவர் ஆழ்வார்களின் கோஷ்டியில் சேர்ந்தவரல்லர். ஆசாரியர்களில் சிலர் ஆழ்வான் என்கிற திருநாமம் வஹிப்பதுண்டு. எங்களாழ்வான், நடாதூராழ்வான் இத்யாதி.) கூரத்தாழ்வான் ஸ்ரீராமாநுஜரிடத்தில் வந்து “நீங்களோ சிவன் கோவிலுக்குப் போகக்கூடாதென்கிறீர்கள், சிவனைத்தொழக் கூடாதென்கிறீர்கள், அரசனுடைய அனுஷ்டானத்திற்கு நீங்கள் அபசாரம் செய்கிறீர்கள்” என்று சொன்னதாக எழுதியிருப்பதைக் காணும்போது ஸ்ரீராமாநுஜருடைய பிரசாரம் கூரத்தாழ்வானுக்கு மிகவும் அநபிமதமாக இருந்ததுபோல் தெரியவில்லையா? இது ஸம்பாவிதமோ? மிகவும் அஸம்பாவிதமல்லவா? ஸ்ரீராமாநுஜருடைய அத்யவஸாயத்திற்கு மேற்பட்டதல்லவா கூரத்தாழ்வானுடைய அத்யவஸாயம். ஸ்ரீராமாநுஜர் புதிதாக ஏதாவது சொல்லியிருந்தாலல்லவோ “தாங்கள் இப்படிச் சொல்லுகிறீர்கள், இது அரசனுக்கு அபசாரம் செய்ததாகிறது” என்று சொல்ல ப்ரஸக்தியாவது உண்டாகும்; அரசனுடைய கொடுங்கோன்மையொன்றுதான் இங்குத் தலைமைபெற்று விளங்கும் விஷயம். அதை மறைத்

தும் அதற்கு மாறுகவும் கதை தொடுப்பது பிராமாணிகபத்ததியாகுமா? கூரத்தாழ்வான் அரசன் ஆளனுப்பியிருப்பதை ஸ்ரீராமாநுஜரிடம் விஜ்ஞாபித்து அவனுடைய தௌஷ்டியத்தை விவரித்துக்கூறி மேல் நடக்கவேண்டியதைப்பற்றி ஆலோசனை செய்தார்—என்கிற இவ்வளவே உண்மை வரலாறு. கூரத்தாழ்வான் இச்செய்தியை ஸ்ரீராமாநுஜரிடம் தெரிவிக்காமல் தாமே யதிவேஷத்துடன் புறப்பட்டு ஸபைக்கு எழுந்தருளினதாகவும் சில நூல்களில் காண்பதுண்டு. இவ்வளவேயொழிய "தாங்கள் அரசனுக்கு அபசாரம் செய்துவிட்டீர்கள்" இத்யாதிகளைக் கூரத்தாழ்வான் ஸ்ரீராமாநுஜரிடம் கூறியதாகப் பேசினது இவர்களுடைய அபிநிவேசமொன்றையே காட்டிநிற்கும்.

இனி அடுத்த விஷயத்திற்குச் செல்வோம்.

"சோழராஜசபையில் சாஸ்திர வாக்யார்த்தங்கள் சொன்னர் கூரத்தாழ்வார்; அநேக வித்துவான்கள் அதற்காகத் தானே வந்திருந்தார்கள்; அவர்களெல்லாரும் தீர்மானம் பண்ணி 'சிவனுக்கு மேலே உயர்ந்த பொருளில்லை' என்று சாஸ்திர வாக்யார்த்தங்கள் சொல்லி ஓர் ஓலையில் *சிவாத் பரதரம் நாஸ்தி* என்று எழுதினர்கள். கூரத்தாழ்வாரும் ஒரு வித்துவான் தானே. நீங்களும் இதற்கு ஆக்ஷேபமிருந்தால் தெரிவியுங்கள்; இல்லாவிட்டால் இதில் கையெழுத்துப்போடுங்கள் என்று அந்த ஓலையை அவரிடம் நீட்டினர்கள். சன்னியாசிவேஷம் போட்டுக்கொண்டு வந்தவர் *அஸ்தி த்ரோணம் அத: பரம்* என்று எழுதினர். இதற்குச் சிலேடையாக இரண்டு அர்த்தம். மரக்காலைக்காட்டிலும் பதக்கு பெரிசு என்று ஒரு பொருள். சிவம் என்பதற்கு மரக்கால் என்று அர்த்தம் பண்ணிக் குறும்பாக எழுதிவிட்டார். அரசனுக்குக் கோபம் வந்தது. ஏதோ அதற்குச் சிக்ஷை கொடுத்தான் என்று குருபரம்பரை சரித்திரம் வந்துகொண்டிருக்கிறது",

என்பதாக எழுதப்பட்டுள்ளது. ஆசார்ய ஸ்வாமிகள் இப்படிப் பேசினர்கள் போலும். மேலே குறித்த வாக்கியங்கள் பெரும்பாலும் புராதன இதிஹாஸ நூல்களுக்கு முரணானவை; ஸ்வகபோல கல்பிதங்கள்; சாஸ்த்ர மர்யாதைக்குப் பொருந்ாதவை—என்பதை அடைவே நிரூபிக்கிறோம்.

கூரத்தாழ்வான் ராஜசபையில் சாஸ்த்ர வாக்யார்த்தம் சொன்னபிறகு, அங்கு வந்திருந்த வித்வான்களெல்லாரும் சிவனுக்குமேலே உயர்ந்த பொருளில்லை என்று சாஸ்திர வாக்யார்த்தங்கள் சொல்லித் தீர்மானம்பண்ணினதாகப் பேசப்பட்டிருப்பது பெரும்பொய். ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவ நூலில் எழுதப்பட்டுள்ள வரலாறுகளைக் கீழே நிரூபிக்கிறோம். [அது தத்துவமல்ல என்று இவர்கள் சொல்லுவதானல் தாங்கள் சொல்லுகிற வரலாறு எந்தநூலிலுள்ளதென்று ஏதேனுமொரு சுவடியையாவது ஆதாரமாகக் காட்டியேயாகவேண்டும். வெறும் கல்பனையாகப் பேசுகிறவர்களுக்கு ஆதாரம் எங்கே கிடைக்கும்?]

குருபரம்பராப்ரபாவ ஸ்ரீஸூக்திகள் வருமாறு;—

"கூரத்தாழ்வானையும் பெரிய நம்பியையும் ராஜமனுஷ்யர்கள் அழைத்துக்கொண்டுபோய்ச் சோழன் முன்னேவிட, அவனும் இவர்களைப் பார்த்து *சிவாத் பரதரம் நாஸ்தி யென்று ஓலைக்கு எழுத்திடச் சொல்ல, கூரத்தாழ்வானும் ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணதிகளாலே பஹுப்ரகாரமாக ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன், ஜகத்காரணபூதன், த்யேயனனவனும் அவனே; ஸர்க்கஸ்திதிஸம்ஹார கர்த்தாவும் அவனே; ப்ரஹ்மருத்ராதிகள் அவனுக்குப் புத்ரபௌத்ராதிகளாய் அவன் நியமனத்திலே இருக்குமவர்கள்; திருவடியை நீட்டினவனொருவன், கமண்டலூதகத்தாலே பக்திபுரஸ்ஸரமாகத்திருவடி விளக்கினவன் ஒருவன்; தத்தீர்த்தத்தை பக்தியோடே சிரஸாவஹித்தவனொருவன். இவர்களில்

பெரியவன் ஆரென்று நீயேவிசாரித்துக் காணாய் என்ன; அவனும் இசையாதிருக்க; ஆழ்வான் கபாலமோக்ஷாதி வ்ருத்தாந்தங்களையும் எடுத்துப் பரக்க உபன்யஸிக்க, சோழனும் அதுகேட்டு அதிக்ருத்தனாய் 'நீர் பெரிய வித்வானாகையாலே உமக்கு வேண்டினபடியெல்லாம் சொல்லவல்லீர்; அங்ஙனன்று; நான் சொன்னபடியே *சிவாத் பரதரம் நாஸ்தி யென்று ஓலைக்கு எழுத்திடும்—என்று ஓலையைக் கையிலேகொடுத்துக் கனக்க நிர்ப்பந்திக்க, கூரத்தாழ்வானும் தம்முடைய த்ருடாத்யவஸாயத்தின்படியே *சிவாத் பரதரம் நாஸ்தி த்ரோணமஸ்தி தத:பரம்* என்று ஓலைக்கு எழுத்திட்டருளினார். இவர் இப்படிப் பரிஹஸித்து ஓலைக்கு ஒப்பமிட்டபடிகண்ட சோழனும் அத்யந்த கோபாக்ராந்த சித்தனாய்ப் பெரியநம்பியை அழைத்து நீர் எழுத்திடும் என்ன, அவரும் ஸ்ரீமந்நாராயணனே பரனென்று பஹுமுகமாக அருளிச்செய்ய, ஆழ்வானையும் பெரியநம்பியையும் நேத்ரோத்பாடனம் பண்ணச்சொல்ல, அவ்வளவிலே ஆழ்வான் வீரசைவனான உன்னைப் பார்த்த கண்கள் எனக்கு ஆகாதென்று தம்முடைய திவ்யநகங்களாலே கீறிக் கண்ணை வாங்கிப் போகட............"

இத்யாதி ஸ்ரீஸூக்திகளுள்ளன. 'இதிஹாஸ மிப்படியன்று, வேறு விதம்' என்பதாக இதுவரை ஒரு மதத்திலும் ஒருவரும் எழுதி வைத்திருக்கவில்லை. இன்றாக ஒருவர் கிளம்பி ஸ்வச்சந்தமாகக் கதைசொல்லப் புறப்படுவது ப்ராமாணிகர்களுக்கு உற்றதன்று. சோழராஜசபையில் சிவனே பரதெய்வமென்று எந்த வித்வானும் தீர்மானம் செய்து விடவில்லை. அப்படிப்பட்ட அதிகாரி ஒருவர்கூட அக்காலத்திலுமில்லை, இக்காலத்திலுமில்லை, எக்காலத்திலுமில்லை. *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசாநோ நேமே த்யாவாப்ருதிவீ* என்று ஸுஸ்பஷ்டமாக உள்ள ச்ருதி வாக்யங்களுக்கு நேர்விருத்தமாகச் சொல்லப்பட்டால் அப்படிச் சொல்லுகிறவர் வைதிக கோஷ்டியில் பரிகணிதராவதற்கு யோக்யதையில்லையே. யாரோ சில ப்ராஹ்மணதரர்கள் இப்படிச் சொன்னாலும் வேதத்தையே செல்வமாகக் கொண்ட வைதிக ப்ராஹ்மணர்கள் இது சொல்லவும் இதை ஆமோதிக்கவும் இதை அநுவதிக்கவும் ப்ரஸக்தியில்லையே. சோழசபையில் ப்ரசண்டர்களான சைவ வித்வான்கள் திரண்டிருந்ததாகவும், அவர்களுடைய வாதமே ஓங்கிநின்றதாகவும், கூரத்தாழ்வானுடைய வாதம் பல்பஜமாய் விட்டதாகவுமே வைத்துக்கொள்வோம்; இதற்காக அரசன் ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களின் கண்ணைக்களைந்துவிடும்படி கட்டளையிடுவது கேட்பாரற்ற அதர்க்கணச் செயலில் சேருமேயல்லது நீதியில் சேருமோ? இப்படியொரு கதை எந்த ராஜ்யத்திலாவது கேட்டதுண்டோ? கேவலம் துராக்ரஹத்தினால் செய்த செயலன்றோ இது. ஆக இந்த இதிஹாஸத்தினால் அவ்வரசனது துஷ்டத்தனமும் த்ருஷ்டத்தனமும் விளங்குமேயல்லது ப்ராமாணிக் ஸார்வபௌமரான கூரத்தாழ்வானிடத்தில் எவ்விதமான குறையும் இடம் பெறாது; விஷ்ணுபாரம்யத்திற்கு ஈஷத்தும் ஹானிவிளைந்ததாகாது. யாரோ சிலர் சொல்லிப்போருகிற சிவபாரம்யத்திற்கு வலிவு உண்டாகவும் ப்ரஸக்தியில்லை.

இவ்விடத்தில் ஒரு சிறந்த விஷயத்தைப் பெரியவர்களுக்கு உபகரிக்கிறோம். திருவாய்மொழியில் (10—7—5) *நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த......பண்ணார் பாடலின்கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடி* என்கிற பாசுரமுள்ளது. விஷ்ணுபக்தி விஹீனர்களான ஆஸுரப்ரக்ருதிகள் தொலையவும், பகவத்பக்தர்களான தேவப்ரக்ருதிகள் வாழவும் திருவாய்மொழி அவதரித்ததென்று இப்பாட்டினால் கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டு பலன்களும் திருவாய்மொழியினால் ஸித்திக்குமோவென்று திருவாய்மொழியின் பெருமையறியாதவர்களுக்கு சங்கைபிறக்கக்கூடுமாதலால் அதைப்பரிஹரிக்க வேண்டி நம்பிள்ளை யென்கிற மஹாசார்யர் பகவத்விஷய மஹாக்ரந்தத்தில் ஸாதித்திருப்பதாவது;

**"அவ்யபதேச்யனுக்கு அனந்தரந்திலவன், தகப்பன் செய்ததைக்கேட்டு இவன் என் செய்தானென் ! என்று கர்ஹித்தான்; ஒருமதிளை வாங்குங்காட்டில் அத்தர்சனம் குலைந்ததோ திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயணமென்றும் வலியன இரண்டு ப்ரபந்தங்கள் உண்டாயிருக்க: என்றானயிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து."**

என்கிற இந்த ஸ்ரீஸூக்திகள் ஈடுமுப்பத்தாறாயிரப்படியிலுள்ளவை. பரம்பரையாகக் காலக்ஷேப முறையில் கேளாதவர்களுக்கு இந்த வாக்கியங்களின் பொருள் தெரிய வழியில்லாமையால் சுருக்கமாகத் தெரிவிக்கிறோமிங்கு.

மேலே எடுத்துக்காட்டிய ஸ்ரீஸூக்தியில் அவ்யபதேச்யனென்றிருப்பது கூரத்தாழ்வானையும் பெரியநம்பியையும் நலிந்த சோழராஜனை நோக்கியது. அவனுக்கு க்ரிமிகண்ட சோழனென்றும் பெயர். கழுத்திலே புழுத்து மாண்டானென்று ப்ரஸித்தி. மஹாபாகவத த்ரோஹியான அவனுடைய பெயரை வாயாலே எடுத்துரைக்கக்கூசி அவ்யபதேச்யன் என்றார். அவனுக்கு அனந்தரத்திலவன் என்றது—அவனுடைய மகன் என்றபடி. அவன் சொன்ன அற்புதமான வொரு வார்த்தை நம் ஆசார்யர்களின் காதில் விழுந்து அஃது இங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

அஃதென்னவெனில்; அந்த சோழராஜன் மரணமடைந்தபோது மகன் சிறுவனாயிருந்தபடியால் அரசனுடைய ஸொத்துக்களை மகனிடம் ஒப்புவிக்க முடியாமல் ஸர்க்கார் தரப்பில் ஒப்படைத்திருந்தார்கள். மகனுக்கு யுக்தவயது வந்தபின் இவனிடம் ஸொத்துக்களை ஒப்புவிக்கையில், ஸ்வல்பஸொத்துக்களே ஒப்புவிக்கப்பட்டன. அப்போது அந்த மகன் கேட்டான்—'என் தகப்பனார் பிரபல தனிகராக ப்ரஸித்தி பெற்றிருந்தாரே; கோடீச்வரரென்றும் அவரைச் சொல்லுவர்களே; அப்படியிருக்க, ஸ்வல்பதொகையை என்னிடம் ஒப்புவிக்கிறீர்களே, மிகுந்த ஸொத்தெல்லாம் எங்கே? என்று கேட்டான். அதற்கு அவர்கள் சொன்னதாவது; 'தகப்பனார் விசேஷதனிகர் என்பது வாஸ்தவமே; அவர் ஆங்காங்கு பெருமாள்கோவில்களையெல்லாம் இடிப்பதற்கும் சிவன்கோவில்களைக் கட்டிவைப்பதற்கும் ஸொத்துக்களையெல்லாம் செலவழித்தார்' என்றார்கள். சிவன்கோவில்கள் கட்டிவைத்ததுபற்றி அந்த மகன் ஒன்றும் சொல்லவில்லை. பெருமாள்கோவில்களையிடிக்கச்செய்தானென்பதைப் பற்றி வியந்தும் வருந்தியும் கூறினனும். ஐயோ! என் தகப்பனார் இவ்வளவு அவிவேகியா? பெருமாள்கோவிலை இடித்து விட்டதனால் ஸ்ரீ வைஷ்ணவதர்சனம் குலைந்துவிடும் என்று நினைத்து விட்டார்?. திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமும் ஸ்ரீவைஷ்ணவதர்சநத்திற்குக் கல் மதிளாக இருக்க, கோவிலையிடிப்பதனால் என்னகும்? என்றான்-என்பது இங்கு அறியத்தக்க வரலாறு. மேலே எடுத்துக்காட்டியுள்ள ஈட்டு ஸ்ரீஸூக்தியில் **"மதிளை வாங்குங்காட்டில்"** என்றது கோவிலையிடித்துவிட்டால் என்றபடி. இப்படி மகனும் அருவருக்கும்படியிருந்த சோழன் தன்னுடைய அவிவேகத்தினாலும் துராக்ரஹத்தினாலும் கூரத்தாழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் தீங்குவிளைத்தானென்பது உண்மை. சைவபண்டிதர்கள் வாதத்தில் வெற்றிபெற்றுவிட்டதாகவும் கூரத்தாழ்வான் வாதம் செய்யமாட்டாமல் குறும்பாக எழுதி வைத்ததாகவும் பேசுவது பிராமாணிகமான பேச்சன்று.

'அஸ்தி த்ரோணம் அத:பரம்' என்றதைப்பற்றி இனித் தெரிவிப்போம். **'த்ரோணமஸ்தி தத: பரம்'** என்பது பாடமேயொழிய *அஸ்தி த்ரோணமத : பரம்* என்பது பாடமல்ல. இதில் என்னப்ரமாதமென்று இலேசாக நினைத்துவிடவேண்டா; உள்ள பாடத்தை மாற்றினால்

இங்கு சந்தஸ்ஸுக்கு பங்கமேற்படும். சிவாத்பரதரமித்யாதியான இது ஒருச்லோகமாக வழங்கப்பட்டு வருகிறது. 'சிவாத் பரதரம் நாஸ்தி த்ரோணமஸ்தி தத:பரம்' என்றால்தான் சந்தோபங்கமில்லாத ச்லோகமாகும். *அஸ்தி த்ரோணமத: பரமென்றால் முன்னேயுள்ள நாஸ்தியின் ஈற்று இகரமும் மேல்வரும் அஸ்தியின் ஆதிஅகரமும் சேருகையில் வியாகரண விதிப்படி யண் ஸந்தியாக, "நாஸ்த்யஸ்தி" என்றாகும். ஓரெழுத்து குறையும். எனவே சந்தோ பங்கம் ஸித்தம். கதையை மாற்றுவதுபோலப் பாடத்தையுமா மாற்றவேண்டும்.

ஆசார்ய ஸ்வாமிகளின் பேச்சில்
"அஸ்தித்ரோணமத: பரமென்று கூரத்தாழ்வார் எழுதினார்; இதற்குச்
சிலேடையாக இரண்டு அர்த்தம்"

என்றிருப்பதும் சாஸ்த்ரரீதியில் ஸமஞ்ஜஸமன்று. ஆலங்காரிகர்கள் இங்கு ச்லேஷாலங் காரம் கொள்ளமாட்டார்கள்; வக்ரோக்தி யென்னுமலங்காரமே கொள்ளுவர்கள். வாக்யம் முழுவதும் ஒரு நபருடைய வார்த்தையாகவேயிருந்தால், அங்கு வக்தாவானவர் இரண்டு பொருள்களை விவக்ஷித்துக் கவிபண்ணியிருந்தால் அங்கு சிலேடையென்பது. உதாரணம்; *ஸர்வதோமாதவ: பாயாத் ஸ யோகங்காமதீதரத்* என்னுமிடம். இங்கே, ஸர்வத: மாதவ: பாயாத் ஸ:, ய: அகம் காம் அதீதரத், என்று பதம் பிரித்து, முதலில் விஷ்ணுபரமாக அர்த்தம் கொள்ளப்படுகிறது. எந்த விஷ்ணு (அகம்) க்ருஷ்ணவதாரத்தில் கோவர்த்தந மலையையும், (காம்) வராஹாவதாரத்தில் பூமியையும் தாங்கினாரோ, ஸர்வத: ஸ: மாதவ: பாயாத்— ஸர்வஸ்வதானம் செய்பவரான அந்த மாதவர் ரக்ஷிக்கக்கடவர் என்று. பிறகு, ஸர்வதா உமாதவ: பாயாத் ஸ:, ய: கங்காம் அதீதரத் என்று பதம் பிரித்து சிவபரமாகவும் அர்த்தம் கொள்ளப்படுகிறது. எந்த சிவன் (கங்காம் அதீதரத்)—ஸ்ரீமஹாவிஷ்ணுவின் ஸ்ரீபாத தீர்த்தமான கங்கையைத் தலையால் தரித்தாரோ, ஸ: உமாதவ: ஸர்வதா பாயாத்—அந்த பார்வதீ பதியானவர் எப்போதும் ரக்ஷிக்கட்டும் என்று. இவ்விருவகைப் பொருள்களும் ஒரு வக்தாவுக்கே விவக்ஷிதமாகி அதற்குப் போருத்தமாக அவரே சொற்களைத் தொடுத்திருப்ப தால் இங்கு ச்லேஷமென்னத் தட்டில்லை. *சிவாத் பரதரம் நாஸ்தியென்ற விவாதாஸ்பத ஸ்தலத்தில் பூர்வபாகத்திற்கு வக்தா ஒருவர்; உத்தரபாகத்திற்கு வக்தா வேறொருவர். இங்கு வக்ரோக்தியலங்காரமேயாகும். இதற்கு உதாரணம்; *முஞ்ச மாநம்திநம் ப்ராப்தம் நேஹ நந்தீ ஹராந்திகே* என்பது. தம்பதிகளுக்கு இரவில் ப்ரணயகலஹமுண்டாயிற்று. மனைவி பேசாமலே யிருந்துவிட்டாள், பொழுதும் விடிந்து விட்டது. அப்போது கணவன் 'முஞ்ச மாநம்திநம் ப்ராப்தம்' என்றான். அம்மா, திநம் ப்ராப்தம்—பகற்போது வந்து விட்டது; மாநம் முஞ்ச=ரோஷத்தை விட்டிடு. என்பதாகப் பொருளை விவக்ஷித்து அவன் இங்ஙனே சொன் னான். மனைவி, இங்கு, 'முஞ்ச, மா, நந்திநம் ப்ராப்தம்' என்று பதவிபாகஞ் செய்து கொண்டு, ப்ராப்தம் நந்திநம் மாமுஞ்ச: வந்திருக்கிற நந்தியை விடாதே என்று கணவன் சொன்னதாக வைத்து, "நேஹ நந்தீ ஹராந்திகே" என்றாள். நந்தி இங்கு வரவில்லை; அது சிவனிடத்தி லுள்ளது என்றபடி. பூர்வவக்தாவினுடைய விவக்ஷையை வேறுபடுத்தி [அர்த்தத்தை மாற்றி] ஸமாதானம் சொன்னபடியாலே இது வக்ரோக்தி யெனப்படுகிறது.

ப்ரக்ருதத்தில் சிவாத் பரதரம் நாஸ்தி என்றவற்கு விவக்ஷிதம், சிவனுக்கு மேற்பட்ட தெய்வமில்லை என்பதாக. இஃது உண்மையில் அஸம்பாவிதமாகையாலே மரக்காலுக்கு மேற்பட்ட அளவுகருவியில்லை யென்று அரசன் சொல்லுவதாக வைத்து அவனுடைய

விவக்ஷையை மாற்றி த்ரோண மஸ்தி தத: பரம் என்று பதிலுரைத்தமையாலே இது வக்ரோக்தியின்பாற்படும். இங்கு ச்லேஷமுமுண்டென்றால் மறுப்போமல்லோம். வக்ரோக்தியணிதான் முக்கியமானது.

'த்ரோண மஸ்தி தத: பரம்' என்றதற்கு சிவனுக்கு மேலே தும்பைப்பூ உசத்தியென்று சொல்லலாம்-என்றதும் ஸமஞ்ஜஸமன்று, "அஸ்த்ரியாம் ஆடகத்ரோணௌ" என்ற அமரகோசத்தின்படிக்கும், "த்ரோணோஸ்த்ரியாமாடகே ஸ்யாத் ஆடகாதிசதுஷ்டயே" என்ற மேதிநீகோசத்தின் படிக்கும் த்ரோணசப்தமானது கூரத்தாழ்வான் விவக்ஷித்த பொருளில்தான் நபும்ஸகலிங்கமாகவுமுள்ளது. தும்பைப்பூ என்கிற பொருள் இதற்குச் சேராது. லிங்கம் அவிவக்ஷிதம் என்றுவிட்டாலும் இவ்வர்த்தம் விநோதவகைக்கும் சேராது; "யதி: பூஜ்யோ ந ஸம்சய:" என்றதற்கு, யதி: பூஜ்யோ ந = உத்தமாச்ரமி பூஜிக்கத்தகுந்தவரல்லர்; ஸம்சய:—அவருடைய நடத்தையில் சந்தேஹிக்கவேண்டும்-என்று பொருள் கொள்வதுபோல இது விதண்டாவாதத்தில் சேருமத்தனை. இதைக்கண்டு முன்னுரைகாரர் 'காரத்தில் நெய்யூற்றினதாக எழுதினர். உண்மையில் நெய்யைத்தள்ளி முளகாய்ப் பொடியைத் துவினவாறிது. ப்ராஜ்ஞர்களுக்குப் பாங்கன்று.

# உபஸம்ஹாரம்

ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் தேவதாந்தரங்களை உபேக்ஷித்திருப்பது அநாதி பரம்பராப்ராப்தம். திருமழிசைப்பிரானுடைய திவ்யசரிதையை எடுத்து வாசித்தால் தத்துவமுணரலாம். ஆதிசங்கரபகவத்பாதாளுடைய ஸித்தாந்தம் இன்னதென்பதை நாம் அவாளுடைய பாஷ்ய வாக்யங்களைக் கொண்டு நிரூபித்திருக்கிறோம். அவாளுடைய ஸித்தாந்தமும், ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான் முதலானோருடைய ஸித்தாந்தமும் இவ்விஷயத்தில் ஒன்றேயொழிய வேறுபட்டதன்று. ஸ்ரீமஹாவிஷ்ணுவே பரதைவம் என்கிற கொள்கையில் சங்கரபகவத்பாதாள் ஓரிடத்திலும் வழுவினதில்லை. அவாளுடைய காலத்தில் அவிவேகியும் மூர்க்கனும் ஆக்ரஹியுமானராஜா இருக்கவில்லையாதலால் அவாளுக்கு இப்படிப்பட்ட ஆபத்து நேரவில்லை. அவாளே இந்த சோழராஜன் காலத்தில் வாழ்ந்திருந்தால் கூரத்தாழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் நேர்ந்த ஆபத்து அவாளுக்கு நேர்ந்திருக்குமென்பதில் என்ன ஸந்தேஹம். அவாள் காலபேதத்தாலும் தேசபேதத்தாலும் தப்பிப் பிழைத்தார்களென்னவேண்டு மத்தனை. ஸ்ரீமந்நாராயணனே பரதெய்வமென்கிற அநாதிவைதிக ஸித்தாந்தத்திற்கு ஒருபோதும் ஹானி விளையாது. *வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி* என்பதையும் *ந தைவம் கேசவாத் பரம்* என்பதையும் ஒரு துவக்கிலே சேர்த்து சபதம் பண்ணின வியாஸபகவானுடைய ஹ்ருதயம்—வேதத்தை ப்ரமாணமாக இசையும் அதிகாரி நாராயணனைத்தவிர வேறு தெய்வத்தை இசையமாட்டான் என்பதேயன்றோ. இதை நன்கு காட்டியே ஆளவந்தார்—*ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:? ப்ரஹ்மா சிவச் சதமக: பரமஸ்வராடிதி ஏதேபி யஸ்ய மஹிமார்ணவவிப்ருஷஸ்தே* என்றார். இதில் "வைதிக: க: ந ம்ருஷ்யதி" என்றதுதான் ஜீவநாடியாயுள்ளது. வைதிகனென்று விருது படைத்தவனொருவன் நாராயண பாரம்யத்தில் அஸஹிஷ்ணுவாயிருக்கமாட்டானென்று வைதிகஸார்வபௌமர்கள் சிலாசாஸநம் பண்ணியுள்ளார்கள். அதற்கு மாறான பேச்சுக்களை வைதிகர்கள் ஒருகாலும் ப்ரசாரம் பண்ணத்தகாது.

---

# முக்கியமான அறிவிப்பு இது காண்மின்

ஸகல சாஸ்த்ர ஸம்மதமான விஷ்ணுபாரம்யத்திற்கு இசையாதே தேவதாந்தர பாரம்யம் சொல்லி வீணை அட்டஹாஸம் செய்பவர்கள் இக்காலத்தில் மட்டுமல்ல, எக்காலத்திலுமிருப்பவர்களே. உலகில் மணிமாணிக்ய மரகத ஸுவர்ணாதிகள் விரளமாய், கரீஷபுரீஷாதிகள் பஹுளமாயிருப்பது எப்படி வியப்பல்லவோ அப்படியே இதுவும் வியப்பல்ல. ஆளவந்தார் என்கிற மஹாசார்யரும், பிள்ளைப்பெருமாளையங்காரென்கிற மஹாபக்தரான திவ்யகவியும் சில கேள்விகள் கேட்டு ச்லோகங்களும் பாசுரமும் இயற்றி வைத்திருக்கிறார்கள். ஆயிரமாண்டுகட்கு முன்பு அவர்கள் கேட்டிருக்கிற கேள்விகளுக்கு இன்று வரையில் யாரும் மறுமொழி வெளியிட்டவர்களில்லை. அந்த கேள்விகள் ஸூர்யசந்திரர்களைப்போலே சாச்வதமாக விளங்கவேணுமென்று கருதியே அவ்வாசிரியர்கள் அக்கேள்விகளைக் கேட்டு வைத்திருக்கிறார்கள். அவை ஏகாந்தமாக இல்லை. மிகவும் பிரகாசமாகவே பரவியுள்ளன. தேவதாந்தர பாரம்யவாதிகள் யாவரும் அக்கேள்விகளைப் பார்த்தும் பலகால் வாசித்தும் தலைகுனிந்து போகிறார்களே யொழிய, ஒருவரும் பதில் சொல்ல முற்படுவதில்லை. இப்போது யாரேனும் இதற்கு முற்படுவதானால் கம்பீரமாக முற்படலாம். "கூரத்தாழ்வான் வாதம் செய்யமாட்டாமல் குறும்பு செய்தார்; ஸ்ரீராமாநுஜர் வாதகோஷ்டிக்குவர அஞ்சியோடிவிட்டார்" என்றிப்படி பொய்ப்பிரசாரம் செய்பவர்கள் புராதனங்களான அந்தக் கேள்விகளுக்கு ப்ராமாணிகபத்ததியிலே நின்று பதில் வெளியிடுவது நன்று. அந்தக் கேள்விகளை இங்கே வெளியிடுகிறோம்.

ஆளவந்தாருடைய கேள்விகள் பன்னிரண்டுகொண்ட ச்லோகங்கள் மூன்று ;—

" க: ஸ்ரீ: ச்ரிய:? பரமஸத்வஸமாச்ரய: க:? க: புண்டரீக நயந:? புருஷோத்தம: க:?
கஸ்யாயுதாயுதசதைககலாம்சகாம்சே விச்வம் விசித்ரசிதசித்ப்ரவிபாகவ்ருத்தம் ?

வேதாபஹாரகுருபாதகதைத்யபீடாத்யாபத்விமோசந மஹிஷ்டபலப்ரதாநை:,
கோந்ய: ப்ரஜாபசுபதீ பரிபாதி? கஸ்ய பாதோதகேந ஸ சிவ: ஸ்வசிரோத்ருதேந ?

கஸ்யோதரே ஹரவிரிஞ்சமுக: ப்ரபஞ்ச:? கோ ரக்ஷதீமமஜநிஷ்ட ச கஸ்ய நாபே:?
க்ராந்த்வா நிகீர்ய புநருத்கிரதி த்வதந்ய: க:? கேந வைஷ பரவாநிதி சக்யசங்க:?"

பிள்ளைப்பெருமாளையங்காருடைய கேள்விகள் ஏழுகொண்ட பாடல் ஒன்று ;—

மங்கைபாகன் சடையில்வைத்த கங்கையார்பதத்து நீர்?
வனசமேவு முனிவனுக்கு மைந்தனான தில்லையோ?
செங்கையா லிரந்தவன் கபாலமா ரகற்றினர்?
செய்யதாளின்மலர் அரன் சிரத்திலான தில்லையோ?
வெங்கண்வேழம் மூலமென்ன வந்ததுங்கள் தேவனோ?
வீறுவாண னமரிலன்று விறலழிந்த தில்லையோ?
அங்கண்ஞால முண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ?

.... .... .... .... ....

இங்ஙனம் ஏழு கேள்விகளைக் கேட்டு இவற்றுக்கு விடை சொல்லவல்லாருண்டோ வென்று பண்டிதர்களுக்கு அனுப்ப, எல்லாரும் ஊமையர்களாயிருக்க, பிறகு

" ஆதலா லரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே "

என்றிட்டுச் செய்யுளைப் பூர்த்தி செய்தார். .... .... ....

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

**கூரத்தாழ்வானிதிஹாஸதத்துவம்**

முற்றிற்று

எம்பெருமானார் திருவடிகளே சரணம். கூரத்தாழ்வான் திருவடிகளே சரணம்.

---

## ஸமய விசேஷத்தில் ப்ராப்தம்.

கூரத்தாழ்வானிதிஹாஸத்தை நாமெழுதி முடித்ததும், சென்னைப் பத்ரிகைகளில் ஒன்றாகிய புநர்வஸூ வென்னும் பத்ரிகையின் (1-4) இதழ் வரப்பெற்றோம். இது சென்ற ஆடிமாதத்துப் பத்ரிகை. இதில் "இராமாயணமும் பரமாத்மாவும்" என்கிற வொரு வியாஸம் ஒரு மஹானால் எழுதப்பட்டு வெளிவந்திருக்கின்றது. இது நாராயணனுடைய மேன்மையை ஸாரமாக வெடுத்துக் காட்டத்தோன்றியதாதலால் மிகவும் சுருக்கமான அந்த வியாஸத்தை இங்குச்சேர்த்து உபகரிப்பது உத்தமமென்றுதோன்றி அப்படியே செய்கிறோம்.

## "இராமாயணமும் பரமாத்மாவும்"

சக்ரவர்த்தித் திருமகன் ஸீதாபிராட்டியைத் திருமணம் புரிந்துகொண்டு, அப்பிராட்டியுடனும், சுற்றத்தாருடனும், பரிவாரங்களுடனும் திரு அயோத்திக்கு எழுந்தருளும்போது, வழியில் பரசுராமன் வந்து குறுக்கிட்டு, தன் வில்லை வாங்கி நாணேற்றுமாறு அச்சக்ரவர்த்தித் திருமகனை வேண்டிக் கொண்டனன் என்பது வரலாறு. பரசுராமன் கையில் இருந்த அவ்வில்லின் பெருமை—

* ததிதம் வைஷ்ணவம் ராம தனு: பரமபாஸ்வரம் ।
ஸமானஸாரம் காகுத்ஸ்த ரௌத்ரேண தனுஷா த்விதம் ॥

.... .... .... .... .... .... ....

ஜ்ரும்பிதம் தத் தனுர் த்ருஷ்ட்வா சைவம் விஷ்ணுபராக்ரமை: ।
அதிகம் மேனிரே விஷ்ணும் தேவா: ஸர்ஷிகணாஸ் ததா ॥*

இத்யாதி ச்லோகங்களினால் விசதம்.

இவற்றின் கருத்து—"இந்தவில் விஷ்ணுவினுடையது. முன், எம்பெருமானுடைய வராஹாவதாரச் செயலைப் பிரமனிடம் கேட்டு, அவ்வெம்பெருமானுடைய மேன்மையை உணர்ந்திருந்த எல்லாத் தேவர்களும், சிவன் த்ரிபுர ஸம்ஹாரம் செய்தபின் சிவனுடையவும் விஷ்ணுவினுடையவும் பலாபலத்தைக் காணக் கருதி, 'யாருடைய வலிமை மிகச்சிறந்தது' என்று நான்முகனைக் கேட்க. அந்நான்முகன் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் விரோதத்தை விளைவிக்க, அவ்விருவரும் கோரமான யுத்தம் செய்ய, அப்போது விஷ்ணுவினுடைய 'ஹூம்' என்னும் ஓசையினால் சிவனுடைய வில்லும் சிவனும் பங்கம் அடைய 'இனிப் போர் நிகழ வேண்டாம்' எனத் தேவர்கள் வேண்டிக் கொள்ள, அவ்விருவரும் சமனம் அடைய, விஷ்ணுவின் விக்கிரமத்தினால், சிவனும் சிவனது வில்லும் பங்கம் பெற்றதைக் கண்கூடாகக் கண்ட முனிவர்களும் தேவர்களும் விஷ்ணுவைச் சிறந்த தெய்வமாக அறுதியிட்டனர்" என்பது.

மேலும், திருவடி இராவணன் முன்னிலையில் இராமபிரானுடைய மேன்மையைக் கூறுமிடத்துத் தென்படும் வார்த்தை—

ப்ரஹ்மா ஸ்வயம்பூச் சதுரானனோவா ருத்ரஸ் த்ரிநேத்ர: த்ரிபுராந்தகோவா ।
இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோவா த்ராதும் நசக்தா யுதி ராமவத்யம் ॥

இதின் கருத்து— "சிறந்த செல்வம் பெற்றிருப்பவனும், வ்ருத்ரன் என்னும் அஸுரனைக் கொன்றொழித்தவனும், முப்பத்து முக்கோடி தேவதைகளைத் துணையாய்க் கொண்டிருப்பவனுமான இந்திரனும், இந்த இந்திரனுக்கும் மேலானவனும், ப்ரளய காலத்தில் ப்ரஜைகளை அழிச்செய்பவனும், காமனை நெற்றிக் கண்ணால் எரித்தவனும், த்ரிபுராந்தகனுமான சிவனும், ஏனையோரைப் போல் பிறவாதவனும் நான்கு முகங்களை உடையவனுமான பிரம்மனும், தனித்தனியாகவோ, ஒன்று சேர்ந்தோ இராமனுடைய சீற்றத்துக்கு இலக்காய் வதம் செய்யத் தகுந்தவனைக் காக்க சக்தியற்றவராம்" என்பது.

மேற் கூறியவாறு, தேவதைகளை (இரக்ஷகராக விளங்குகின்றவரை)க் கழித்துப் பேசும் வார்த்தையில், "நாராயணனும் சக்தியற்றவன்" என்று குறிக்கப் பெற்றிலது. இதனால், "இராமபிரான் நாராயணனே" என்னும் உண்மை யார்க்கும் கூறாமலேயே நன்கு விளங்குகின்றதன்றோ?

அன்றியும், இராமபிரானால் கொலையுண்டு கிடக்கும் இராவணனைக் கண்டு, நெஞ்சழிந்து புலம்பிப் பேசும் மண்டோதரி ஒருவாறு தெளிந்து அந்த இராமபிரானுடைய மேன்மையைப் பின் வருமாறு பேசியிருக்கிறாள்.

இராமபிரானே! "இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம் இனியறிந்தேன் எம்பெருமானுன்னை" என்று பெரியோர் அருளிச் செய்தது போன்று இத்தனை போதும், உன்னை அறிந்திலேன்: இப்போது அறிந்தேன் என்றாள் மண்டோதரி. இதைத் திருச்செவியேற்ற இராமபிரான், "நீ என்னை அறிந்தவாறு எங்ஙனே?" என்ன, திருநாட்டில் திருவாழி, திருச்சங்கு, திருத்தண்டு இவற்றைத் திருக்கைகளில் ஏந்தியும், திருமறுவைத் திருமார்பில் சின்னமாகப் பெற்றும், திருமகளோடு என்றும் வாழ்பவனாகிய திருமால் நீ என்றாள். "திருமாலாகிய நாம் திருநாட்டை விட்டிட்டு இவ்வுலகில் வரக் காரணம் யாதோ?" என்று சக்ரவர்த்தித் திருமகன் திரும்பவும் வினவினான். "எல்லா உலகங்களினும் உள்ள எல்லா உயிர்களுக்கும் நன்மையைச் செய்யத் திருவுள்ளம் கொண்டு, மானிட வடிவத்துடன் திருவவதாரம் செய்து, உலகத்திற்கே கண்டகனாகிய இராவணனைக் கொல்லவந்தாய்; கொன்றாய்" என்றாள் மண்டோதரி. இக்கருத்துக்களை, பின்குறிக்கப்பெறும் மண்டோதரி வார்த்தையில் காண்க:—"தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:

ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ: அஜய்யச் சாச்வதோ த்ருவ: ।
மானுஷம் வபுராஸ்தாய விஷ்ணுஸ் ஸத்யபராக்ரம: ॥"

இன்னமும், (இராமபிரான் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளும் போது, பிரமன் வார்த்தையாகக் கால புருஷனால் கூறப்பெற்றுள்ளதில்) தேவரீருடைய திரு நாபிக் கமலத்தில் பிரமனாகிய என்னை உண்டாக்கி, என்னிடம் படைப்புத் தொழிலும் தேவரீரால் வைக்கப் பெற்றுள்ளது' என்னும் கருத்தைக் கொண்டுள்ள,

பத்மே திவ்யே அர்க்க ஸங்காசே நாப்யாமுத்பாத்ய மாமபி ।
ப்ராஜாபத்யம் த்வயா கர்ம மயி ஸர்வம் நிவேசிதம் ॥

என்னும் வார்த்தையைக் காணுங்கால் நாராயணனுடைய மேன்மையை நாம் நன்கு அறியலாம் அன்றோ?

முன்னம், "ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே" "நஸத் நசாஸத் சிவ ஏவ கேவல:" "ஏகோஹவை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசான:" என்னும் வாக்கியங்கள் கருத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் வண்ணத்தில் அமைந்தில: மீமாம்ஸா சாஸ்திர முறையைப் பின்பற்றி ஆய்ந்துகாணும் மேதாவிகளுக்கே கலக்கம் சிறிதும் இன்றி, 'ஏனைய பொருள்கள் இன்றி இருக்கும்போது, சிவனே, பிரமனே இருந்ததாகவும் எல்லாம் அழிந்த காலத்து, நாராயணனே இருந்ததாகவும் அவ்வாக்கியங்களின் தெளிந்த பொருளைக் காணக் கூடும்' என்று கொள்ளவேண்டும்.

இப்போது இராமாயணம், (மீமாம்ஸா சாஸ்திரம் செய்யும் உதவியைப் போலன்றி) யார்க்கும் எளிதில் நன்கு விளங்குமாறு (1) விஷ்ணு, சிவன் இவ்விருவருக்கும் போர் நடக்கும் போது, விஷ்ணுவினுடைய மேன்மையை முனிவரும் தேவரும் கண் கூடாகக் கண்டனர்; (2) இந்திரனே, சிவனே, பிரமனே, ஒன்று சேர்ந்த இம் மூவரோ, இராமபிரானுடைய சீற்றத்துக்கு இலக்கானரை இரக்ஷிக்க இயலாதவர்; (3) இவ்வுலகத்திற்கு நன்மையையும், இராவணனுக்கு அழிவையும் செய்ய வந்த இரக்ஷக தெய்வமான நாராயணனே இராமபிரான்; (4) படைப்பவனாகிய பிரமன் படைப்புத் தொழிலைப் பரம புருஷனாகிய இராமபிரானுடைய அருளாலேயே பெற்றிருப்பவன்; என்னும் உண்மைக் கருத்துக்களை முறையே, பரசுராமன், திருவடி, மண்டோதரி, (பிரமன்) காலபுருஷன் ஆகிய இவர்கள் வாக்கியங்களினால் நன்கு இயம்புகின்றதைக் கண்டோமல்லவா?

மேற் கூறிய உண்மைக் கருத்துக்களை நாம் மனத்தில் கொண்டு "ஹிரண்ய கர்ப்ப:" "நஸத் நசாஸத்" "ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா நேசான:" என்னும் வாக்கியங்களைக் கண்டால், மந்த மதிகளுக்கும் கலக்கம் சிறிதும் உண்டாகாதன்றோ?

இவ்வாறு நாராயணன்மேன்மையையும், ஏனையோருடைய தாழ்ச்சியையும், ஆங்கு ஆங்கு பல வாக்கியங்களினாலும் மிக மிகத் தெளிவாகத் தெரிவித்திருத்தலை ஒருவாறு சுருக்கமாகக் கண்டோம்." [இவ்வளவும் புநர்வஸு பத்ரிகையில் வெளிவந்த வியாஸம்.]

"விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆகுலீகரோதி ஹ்ருதயம்" என்பது காளிதாஸ மஹாகவியின் வாக்கு. ஒன்று சொல்லவேணுமென்று நெஞ்சில் தோன்றினால் அதைச் சொல்லியே தீரவேணும். சொல்லாது விட்டிட்டால் நெஞ்சு வியாகுலமாகியே கிடக்கும் என்பது மேலே குறித்த காளிதாஸ வாக்கின் கருத்து. ஆதலால் இங்கு விவக்ஷிதமான தொன்றை வெளியிடுகிறோம். மேலே உதாஹரித்த 'இராமாயணமும் பரமாத்மாவும்' என்ற வியாஸத்தில் மண்டோதரியின் வார்த்தைகளை யெடுத்துக்காட்டி அவதாரிகையிட்டு விவரணம் செய்திருப்பதானது ஸ்ரீராமாயண ப்ரகரணத்திற்குச் சேருமோ?. மண்டோதரி இராமபிரானுடைய மேன்மையை அற்புதமாகப் பேசியிருக்கிறாளென்பதில் ஐயமில்லை; அதில் விப்ரதிபத்திலேசமும் கிடையாது. வியாஸமெழுதியவர் தாம் செய்துள்ள விவரணத்தில் வாக்ய விந்யாஸத்தை அடைவுபடச் செய்திருக்கவில்லை யென்பதொன்றே இங்கு வக்தவ்யம்.

மண்டோதரியின் வார்த்தையாக எடுத்துக்காட்டியுள்ள * தமஸ: பரமோ தாதா * இத்யாதி ச்லோகங்கள் யுத்த காண்டத்தில் நூற்றுப்பதினொன்றாம் ஸர்க்கத்தில் உள்ளவை. இந்த ஸர்க்கத்தில் மூன்றாவது சுலோகம்முதல் எண்பத்தைந்தாவது சுலோகம்வரை 83 சுலோகங்கள் மண்டோதரியின் புலம்பலாக வெளிவந்தவை. இத்தனை சுலோகங்களும் ப்ரேதனான ராவணனை முன்னிலையாக்கிச்சொல்லுமவை யென்பது நிஸ்ஸந்தேஹமும் நிர்விவாதமுமானது. இவற்றில் த்வம், த்வாம் த்வயா, தவ, த்வயி என்று அடுத்தடுத்து வருமவை யெல்லாம் இராவ

ணனேயே குறிப்பவை. இராவணனை நோக்கி இராமனுடைய பெருமைகளைக் கூறுகின்றளே யொழிய் இராமனை நோக்கிக்கூறவில்லை யென்பது ஸ்பஷ்டம். அப்படியிருக்க, மேலே உதாஹரித்த வியாஸத்தில் "இராமபிரானே! இனியறிந்தேன்" என்று தொடங்கும் வாக்யச்ரேணிகள் ஸமஞ்ஜஸமாவதற்கு ப்ரஸக்தியுண்டா? "இத்தனைபோதும் உன்னையறிந்திலேன், இப்போதறிந்தேனென்றுள் மண்டோதரி" என்றதும், "இதைத்திருச்செவியேற்ற இராமன் என்னை நீ அறிந்தவாறு எங்ஙனேயென்று மண்டோதரியைக்கேட்க" என்றதும், அதற்கு அவள் மறுமொழி கூறின பிறகு மறுபடியும் அவளை நோக்கி இராமன் "திருமாலாகிய நாம் திருநாட்டைவிட்டு இவ்வுலகில் வரக் காரணம் யாதோ?" என்று கேட்டதாக எழுதியதும் பொருத்தமாக இல்லையே. மண்டோதரிக்கும் இராமனுக்கும் ஸம்வாதமாகவைத்துப் பேசுவதற்கு இது இடமன்றே. இவர்களுக்குப்பரஸ்பரம் முகாவலோகனமே கிடையாதுகிடீர்.

ஸ்ரீராமாயணத்தில் விதவைகள் மூவரின் வாக்கினல் இராமபிரானுடைய பெருமைகளைப் பேசுவித்தார் வான்மீகி முனிவர். சூர்ப்பணகையும் தாரையும் மண்டோதரியுமே அம்மூவராவர். இவர்களுள் தாரையொருத்திதான் இராமனை நேராக விளித்து அவனது பெருமைகளை வெளியிட்டவள். * த்வமப்ரமேயச் ச * இத்யாதிகள் காண்பது. *தருணெள! ரூபஸம்பந்நெள * இத்யாதி வார்த்தைகளை சூர்ப்பணகை கரதூஷணுதிகளிடம் கூறினளேயல்லது இராமனை நோக்கிக் கூறவில்லையென்பது எப்படி உண்மையோ அப்படியே மண்டோதரியும் இராமனை நோக்கிக் கூறவில்லையேன்பது உண்மை. இதற்குமாருக அஸங்கதமான அவதாரிகைகளையிட்டு விவரிப்பது ரஸபங்கமல்லவா? இத்தகைய விவரணம் இதற்குமுன்னமும் வேறொரு புத்தகத்தில் காணப்பட்டது. இப்படி இனியும் வெளிவராமைக்காக இது தெரிவிக்கலாயிற்று.

ஆனல் ஒன்று சொல்லக்கூடும்; மண்டோதரி இராமனை நோக்கிச் சொல்லவில்லையென்பதை நாம் நன்கு அறிவோம்; ஆனாலும் இப்படி ஸம்வாதமாகவைத்து உரைப்பது ஓர் அழகு என்று தோன்றிச் செய்ததத்தனை—என்று. தத்துவத்தையுணர்த்தி நிற்பதே நமது கர்த்தவ்ய மாதலால் *ஓம்! சாந்திச்! சாந்திச் சாந்தி:* என்று நிற்கிறேம்.

---

## இனி த்வாரகாயாத்திரைச் செய்திகள்.

17—8—58 அதாவது ஆவணி மாதப்பிறப்பன்று மாலை 6-மணிக்குமேல் நாதத்வாரா வைவிட்டுப் புறப்பட்ட நாம் அன்றிரவு மறுபிறவி பிறந்த செய்தியைக் கீழே விவரித்தோம். மறுநாள் காலை 7-மணிக்கு ஸித்தபூர் வந்து சேர்ந்தோம். இவ்விடத்தை மாத்ருகயா என்று வழங்கிவருகிறார்கள். ஸ்ரீவைஷ்ணவேதரர்கள் இவ்விடத்தில் மாத்ருச்ராத்தம் செய்கிறார்களென்று கேள்வி. ஸரஸ்வதீஸ்னானம் இங்கு விசேஷம். ஸ்ரீரங்கம் தாதாசார்யருக்கு அதீனமான மந்திரமொன்று இங்கு ஸ்டேஷன் ஸமீபத்திலுள்ளது. மற்றுஞ்சில பெரிய தருமசாலைகளுமுண்டு. ஸரஸ்வதீநதீ ஸமீபத்தில் மிகப்பெரிய தருமசாலையொன்றில் ஒரு பகல் தங்கியிருந்து, மறுநாள் காலை வீரங்காம் என்ற விடத்தில் பெருமாள் திருவாராதனத்தைச்செய்துகொண்டு அங்கிருந்து நேராக த்வாரகைக்குச் சென்று சேர்ந்தோம்.

## 23. கோமதீ த்வாரகை

கோமதீத்வாரகை யென்றும் பேடீத்வாரகை யென்றும் டாகோர்த்வாரகை யென்றும் இப்படி பலவிடங்களை த்வாரகையாக வ்யவஹரித்து வருகிறார்கள். ஆனாலும் த்வாரகை யென்று உலக மெல்லாம் வழங்குவது கோமதீத்வாரகையேயாகும். கோமதீநதியானது இவ்விடத்தில் ஸன்னிதியருகேயுள்ள ஸமுத்ரத்தில் ஸங்கமமடைகிறபடியால் இவ்விடத்தை கோமதீத்வாரகை யென்று வ்யபதேசிக்கிறார்கள். இந்த நதியின் தீர்த்தம் மற்ற விடங்களில் மதுரமாயிருந்தாலும் இங்கு ஸமுத்ர ஸம்பந்தம் ஒரு யோஜனை தூரம் ஏற்பட்டு அங்கிருந்தே க்ஷாரஸலிலமாய்விட்டது. த்வாரகா நாதனுடைய ஸன்னிதி வெகு புராதனமாயும் அற்புத சிற்பங்களமைந்ததாயும் ஸர்வேந்த்ரியாகர்ஷகமாயும் காண்கிறது. * சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதி * என்ற ஆண்டாளுடைய மங்களாசாஸனம் மிகப் பொருத்தமாகக் காண்கிறது. இங்குப் பெருமாளுடைய திருமுன்பே கண்ணபிரான் விஷயமான 200 பாசுரங்கள் ஸேவித்து சாத்துமுறை செய்ய ப்ராப்தமாயிற்று. ஆலயாதிகாரிகள் மிகுந்த உகப்பு காட்டினார்கள். ஸ்டேஷனுக்கும் ஸன்னிதிக்கு மிடையில் தோதாத்ரிமடம் யாத்ரிகர்கள் தங்குவதற்கு மிகவும் ஸௌகரியமான இடம். பெரிய தோட்டத்திலுள்ளது.

ஒரு முக்கியமான விண்ணப்பம்;— 17—8—58 இரவு நேர்ந்து கழிந்த விபத்தின் கடுமை த்வாரகையில் 20—8—58 காலை சேர்ந்தபிறகு மிகவும் தலையெடுத்தது. ஹ்ருதய கோசத்தில் ஒருவிதமான துடிப்பு ஏற்பட்டது. அப்போது த்வாரகாதீசன் திருமுன்பே யிருந்துகொண்டு சிலஸ்துதிநூல்களை இயற்றி மனச்சாந்தி யடைந்தேன். அவை யாவன, 1. தேவப்பெருமாள் விஷயமான ஸுப்ரபாதஸ்துதி. 2. தேவப்பெருமாள் விஷயமான அஷ்டோத்தர சதநாமஸ்துதி. 3. ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் அஷ்டோத்தர சதநாம ஸ்துதி. 4. பொய்கையாழ்வார் அஷ்டோத்தர சதநாமஸ்துதி. 5. நம்மாழ்வார் அஷ்டோத்தர சதநாமஸ்துதி. 6. நெல்லூர் ஸ்ரீரங்கநாயகப் பெருமாள் ஸுப்ரபாதம். 7. வேதாந்த தேசிகன் அஷ்டோத்தர சதநாமஸ்துதி. ஆக இந்த ஏழு ஸ்துதி நூல்களை த்வாரகையில் விஜ்ஞாபித்து அன்றே அச்சிடுவதற்கு மனுப்பினேன். தெலுங்கு லிபியிலும் தேவநாகரலிபியிலும் இவை அச்சாகிவிட்டன. க்ரந்த லிபியிலும் அச்சாகி வருகிறது. இவற்றுள் முதல் ஸ்துதி மட்டும் இங்கே காட்டப்படுகிறது.

கஶி ம்ரிமைஷூ நிஷூ-யூமணீஜந்ஹிஹம் வஸஹம்
ஸ-யுமிதஸ-வ்ஹாதந-திஹிஸ்-வதாம்ஷிஸதாழ் ।
பஸ-ஹசதிர-நிஷெஷிசயுகீதிழதிவிழயுஸெஸ்
விவ-யுசஹாயநஸிழஸ-ஷியாஸ்தகயும் ஸஷியாஸ் ॥ கரு

இதி ஸ்ரீ தெவாயிராஜ ஸ-வ்ஹாதஸ்து-திஸ்ஸாவா.

## 24. பேடத்வாரகை.

கோமதீ த்வாரகையிலிருந்து ஓகாபோர்ட் ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து அரைமணி காலம் படகில் பயணம் செய்து அடையக்கூடிய தலமிது. இங்கும் த்வாரகா நாதனுடைய ஸன்னிதி மிக விலக்ஷணமாக அமைந்திருக்கின்றது. இதுவும் புராதனமானதென்றே தெரிய வருகிறது. ஸ்ரீ க்ருஷ்ண பகவான் த்வாரகாபுரியை ஏற்படுத்தினபோது பல விடங்களில் தனக்கு ஆஸ்தானம் அமைத்துக்கொண்டதாகவும், அதனுலேயே த்வாரகா பேதங்கள் ஏற்பட்டதாகவும் சொல்லுகிருர்கள். இது ஸம்பாவிதமாகவே தோன்றுகிறது. பேடத்வாரகையிலிருந்து மறுபடியும் கோமதி த்வாரகைக்கு வந்தே மேல்யாத்திரை நடைபெறவேண்டும்.

## 25 போர் பந்தர்—ஸுதாமாபுரி.

கோமதீத்வாரகையிலிருந்து ராஜகோட் வழியாய் போர்பந்தர் சேர்ந்தோம். இதற்கு ஸுதாமாபுரியென்று மறுபெயர் வழங்கும். குசேலருக்கு ஸுதாமா என்று பெயர். அவர் பிறந்ததும் வளர்ந்ததும் இவ்விடத்திலென்பர் இவ்விடத்தில் சிறிய ஆலயமுள்ளது. இது புராதனமன்று என்கிருர்கள். நகரம் மிகரமணீயமாய் மாடமாளிகை சூழ்ந்ததாய் வாஸத்திற்கு ஸ்ப்ருஹணீயமாய்க் காண்கிறது. மஹாத்மாகாந்தியின் ஜன்மபூமி இதுவே யென்கிருர்கள். ஐந்து லக்ஷம் ரூபாய் செலவில் காந்திஜீ மாளிகை யொன்று இவ்விடத்தில் நாலைந்து வருஷங்களுக்குள்ளாக வெகு விசித்திரமாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவரது தாய் தகப்பன்மாருடைய மிகப் பெரிய ப்ரதிக்ருதியும் இதில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. உயர்ந்த பல நூல்கள் சேமிக்கப்பட்டிருக்கின்றன. பரமபக்தரான ஒரு ஸேட்டின் நன்கொடையைக்கொண்டு இந்த அரிய பெரிய மாளிகை ஏற்படுத்தப் பட்டதாம். மிகவும் மனோஹரமாயிருக்கின்றவிது பரம பவித்ரமாயும் காணப்படுகிறது. பொதுவாக ஸகல ஜனங்களுக்கும் ஆகர்ஷகமாய் விளங்குகின்றது. ஸ்டேஷன் வாசலிலேயே மிகப் பெரிய தர்மசாலையுள்ளது.

## 26 ப்ரபாஸ பட்டணம்.

குசேலபட்டணத்திலிருந்து ப்ரபாஸபட்டணம் வந்து சேர்ந்தோம். "மாதவத்தோன் புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான்" என்கிற பெரியாழ்வார் திருமொழியின்படியே பன்னிரண்டாண்டுகளுக்கு முன்பு இங்கு ஸ்நானம் செய்கையில் மாண்டு போயிருந்த ஸாந்தீபநி புத்திரனை குருதக்ஷிணையாக மீட்டுக் கொடுத்தவிடம் இது என்பர்கள். ஏகாந்தமாகவும் புனிதமாகவுமுள்ள இத்தலம் தபஸ்விகளுக்கு வாஸ யோக்யமானது. இங்கே தீர்த்தகட்ட ஸமீபத்தில் இரண்டு ஸ்ரீ வைஷ்ணவ மந்திரங்களும் தர்மசாலையும் வாஸ ஸௌகரியமளிப்பன. விராவல் என்கிற ஸ்டேஷனிலிறங்கி இரண்டு மூன்று மைல்தூரம் சென்று அடையவேண்டிய தலமிது.

## 27. அஹமதாபாத் நகரம்.

ப்ரபாஸபட்டணத்திலிருந்து ராஜகோட் போகாமல் வேறு வழியாய் அஹமதாபாத் நகரம் வந்து சேர்ந்தோம். இங்கு க்ஷேத்ர தீர்த்த விசேஷமில்லையாயினும் மார்க்க க்ரமத்தில் தங்கவேண்டுமிடமாகிறது. இங்கு, சபர்மதி நதிக்கரையில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ராமாநுஜ கூடமும் தருமசாலையும் விசேஷ ஸௌகரியமாகவுண்டு. இவ்வூரில் அவசியம் காணவேண்டிய காட்சியொன்றுண்டு; அதாவது கீதாமந்திரம். விலக்ஷண பகவதநுக்ரஹம் பெற்ற வொரு பக்தசிகாமணியின் பெரு முயற்சியினால் பல லக்ஷரூபாய்ச் செலவில் வெகு விசாலமாயும் ஸர்வேந்த்ரியாகர்ஷகமாயும் லோகோத்தரமாயும் அமைக்கப்பட்ட மந்திரமிது. இங்கு உட்புகும்போதே ஞானபக்தி விரக்திச் செல்வங்கள் நம்மை வந்து அணைத்துக் கொள்வன போலும். இதில் மூன்று மாடிகளுள்ளன. பல விரக்தர்கள் பேரின்பமாக வாஸஞ்செய்து கொண்டிருக்கிறார்கள். கீழே கீதை முழுவதையும் பதினெட்டு பகுதியாகப் பரமஸுந்தர தேவநாகர திவ்யலிபியில் சிலாசாஸனமாகப் பொறித்திருக்குமழகு மிகச் சிறந்தது. இந்த மந்திரத்தை அமைத்த மஹாத்மா வித்யானந்தஜீ யென்பவர் சென்ற வாண்டில் ஸமாதியடைந்தார்.

## 28. டாகோர் த்வாரகை.

அஹமதாபாதிலிருந்து ஆனந்த் ஜங்ஷன் வழியாய் டாகோர் என்னுமிடமடைந்தோம். த்வாரகைகளில் இதுவும் ஒன்றாகப் பரிகணிதமாயுள்ளது. மிகப்பெரிய கோவிலில் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவின் அற்புதமான தரிசனம் மிகவும் பாராட்டத் தக்கதாகவுள்ளது. ஸ்டேஷனிலிருந்து ஒருமைல் தூரத்திலுள்ளது ஸன்னிதி. தீர்த்த ஸௌகரியமும் தர்மசாலை வஸதியும் வெகு ரமணீயமாகவுள்ளது. பரதமந்திரம் என்கிற மிகப்பெரிய ஸ்ரீ வைஷ்ணவ மடத்திற்கு அதிபதியான மோஹனதாஸ் என்கிற மஹந்த் இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதிப்பதில் ஆஸ்தை கொண்டிருக்கிறார்.

## 29. பாம்பே மஹாநகரம்

கல்கட்டா, அஹமதாபாத் முதலிய நகரங்களுக்குப் போல இந்நகருக்கும் வழியடைவில் வரநேரிட்டது. நகரின் சிறப்பைப்பற்றி இங்கு நாம் எழுதவேண்டியது ஒன்றுமில்லையன்றோ. மஹாயசஸ்வியாயும் ஜகத்குரு ப்ரக்க்யா விக்யாதராயும் விளங்கின ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் காதி. அனந்தாசார்ய ஸ்வாமியால் இங்குப் பனஸவாடியில் ஏற்படுத்தப்பட்டுள்ள திருவேங்கடமுடையான் ஸன்னிதி தென்னாட்டுக்கோவில் முறையில் விலக்ஷணமாக நடைபெற்று வருவதால் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இங்குத் தங்கி யிருக்க வசதியுண்டு. தர்மசாலைகளும் மிக வுண்டு. இவ்விடத்தில் நமது தென்னாட்டினர் உத்யோக முறையில் அபரிமிதமாக வந்து சேர்ந்திருக்கிறார்கள். இவ்வூரில் மூன்றுநாள் தங்கி யிருந்தோம்.

## 30. நாஸிக் பஞ்சவடீ

பாம்பே நகரத்திலிருந்து நாஸிக்ரோட் என்கிற ஸ்டேஷன் சேர்ந்து அங்கிருந்து 5, 6 மைல் தூரத்திலிருக்கும் பஞ்சவடீ க்ஷேத்திரம் சென்றோம். இங்கு கோதாவரியின் ப்ரவாஹம் வெகு ஆச்சரியமானது. நதியின் கரையில் பல தர்மசாலைகளுண்டு. பிராமணர்களுக்கு சங்கரமடம் ஸௌகரியமானவிடம். இந்த க்ஷேத்திரத்தில், சூர்ப்பணகாபங்கஸ்தலம், மாரீச வதஸ்தலம், மஹர்ஷிகளின் தபோவனங்கள் முதலான பலவிடங்கள் காட்டப்படுகின்றன.

## 31. பண்டரிபூர்.

பஞ்சவடியிலிருந்து குர்ட்வாடி ஜங்ஷன் வழியாக பண்டரிபூர் சேர்வது. பாண்டுரங்கக்ஷேத்ரமென்பதே பண்டரிபூர் என்றும் பண்டராபுரமென்றும் சிதைந்து வழங்குகின்றது. இங்கு விட்டலநாதனென்னும் எம்பெருமானுடைய ஸேவை மிகவுமினிது. ஸன்னிதியின் ஸன்னிவேசங்கள் மிகப்பெரியன. எம்பெருமானுடைய ஸௌசீல்யமோ அப்ரமேயமானது; பக்தர்கள் திருவடி வாரத்திலே தலையை மடுத்து ஸேவிக்கலாம்படியான ஸௌலப்யம். பக்தர்களின் பஜனைகளும் கீர்த்தனங்களும் இங்கு இடைவீடின்றி நடக்குமது பெரிய விசேஷம். இந்த க்ஷேத்திரத்தில் சந்திரபாகாநதி பெருகுகின்றது. அதன்கரையில் ராம்பாக் என்னும் மிகப்பெரிய தோட்டத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விசாலமான வஸதியுள்ளது.

## 32. நிகமனம்.

பண்டரிபூர் ஸேவையோடு எங்களுடைய இந்த க்ஷேத்ரதீர்த்தயாத்திரை ஸமாப்தி பெற்றது. 6—9—58ல் ஸ்ரீ க்ருஷ்ணஜயந்தீ மஹோத்ஸவம் நேர்பட்டபடியால் அன்று திருவேங்கடமுடையான் திருமலையில் சிலரும், திருவல்லிக்கேணியில் சிலரும், பெருமாள் கோயிலில் சிலருமாகச் சென்று சேர்ந்து அநுபவிக்கப் பெற்றார்கள். பரமபவித்திரமான இந்த யாத்திரையில் ஸம்பவித்த அநிவார்யமான வொரு குறையை விஜ்ஞாபித்துக் கொள்ளாமலிருக்க முடியவில்லை. அதாவது, ஸ்ரீமதுபயவே. ஆழ்வார்திருநகரி. இளையவில்லி. சடகோபாசார்ய ஸ்வாமியும், அவருடைய திருத்தம்பியாரான வியாகரணவேதாந்த வித்வான். ஸ்ரீ உ.வே. கோயில். சதாபிஷேகாசார்யரும் இந்த யாத்திரைக்கு ப்ரதாந நிர்வாஹகர்களாகக் கலந்து கொண்டிருந்தார்கள். பதரிகாச்ரமம் ஸேவித்துத் திரும்பின பிறகு சதாபிஷேகாசார்யருக்கு ஆரோக்யக் குறைவு உண்டாகி ப்ருந்தாவனத்தில் இரண்டு வாரங்கள் தங்கியிருந்து சிகித்ஸை பெறவேண்டியதாயிற்று. அவருடைய உதவிக்காக அவரது திருத்தமையனாரும் அங்கே தங்கியிருக்க நேர்ந்தது. பகவத்பாகவத அநுக்ரஹ விசேஷத்தினால் பரிபூர்ணமான ஆரோக்யம் விளைந்து, அங்கிருந்து அவர்கள் நேராக ஸ்வஸ்தானம் சென்று சேரவேண்டியதாயிற்று. புஷ்கர த்வாரகாதியாத்திரையில் அவர்களுடைய ஸஹயோகத்தை இழந்திருந்தோமென்பது மிகப்பெரிய குறையே. ஆனாலும் பரிபூர்ணமான ஆரோக்ய மேற்பட்டதற்கு ஸந்தோஷமே.

ஏற்கெனவே நாம் ஸங்கல்பித்திருந்தபடி 11—9—58ல் ஸ்ரீ காஞ்சியில் நமது க்ருஹத்தில் அகண்ட பாராயணமாக நாலாயிரதிவ்யப்ரபந்த ஸேவா கோஷ்டி அறுபது ஸ்வாமிகள் சேர்ந்து நடந்தது. காலை 5-மணிக்குத் தொடக்கமாயிற்று. பகல் 11-மணிக்கு முதலாயிரம் முடிந்தது. மாலை 6-மணிக்குப் பெரிய திருமொழி முடிந்தது. இரவு 9-மணிக்கு இயற்பா முடிந்து பின்மாலை 3-45-க்குத் திருவாய்மொழி சாத்துமுறையாகி கோஷ்டீஉத்ஸவகாரியங்கள் நடைபெற்றன. நித்யஸ்ரீர் நித்யமங்களம். .... .... .... *

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியருடைய

**1958ஆ வடநாட்டுத்திருப்பதி யாத்திரை வரலாறு முற்றிற்று.**

---